॥ ஸ்ரீஹரி: ॥ 608

# பக்தராஜ ஹனுமான்

## (கதைகள்)





ஆசிரியர்

ஸ்ரீஹனுமான் பிரசாத் போத்தார்

॥ ஸ்ரீஹரி: ॥

# பக்தராஜ ஹனுமான்

## (கதைகள்)








ஆசிரியர்

ஸ்ரீஹனுமான் பிரசாத் போத்தார்

भ० रा० ह० ( तमिल ) १—

|| ஸ்ரீஹரி: ||

முதல் பதிப்பு: 1994 பிரதிகள்: 5, 000

விலை: ரூ. 4.00

தமிழாக்கம்: ப்ரும்மஸ்ரீ பாலக்ருஷ்ண சாஸ்திரிகள்,
பரனூர்.



கிடைக்குமிடம்:

கோபால் சேவா ட்ரஸ்ட்,
82, கிருஷ்ணா டாக்கீஸ் ரோடு,
ஈரோடு - 638 003.
Ph. No. 213976, 212902, 211668.
Fax No. 0422 213274.

வெளியிடுபவர்:

கோவிந்தபவன் கார்யாலயம்,
கீதாபரஸ்,
கோரக்புர் (உ.பி.)

பதிப்பாளர்: கீதாப்ரஸ், கோரக்புர் - 273 005.

4-2

ஸ்ரீஹரி:

# முதல் பதிப்பின் வேண்டுகோள்

பழைய காலத்து லட்சியப் புருஷர்கள் சிலரது வாழ்க்கையையும், அவர்களது உபதேசங்களையும் சுருக்கமாய் வெளிக்கொணர வேண்டுமென்ற எண்ணம் வெகுநாட்களாய் இருந்தது. ஆனால் இதற்கு எந்தவித முயற்சியும் செய்யவில்லை. தற்பொழுது **"ஸ்ரீசாந்தனு பிஹாரிஜீ த்விவேதி"** கருணையுடன் இக்காரியத்தை ஏற்றுக் கொண்டார். அதன் பயனாக **"பக்தராஜ ஹனுமான்"** என்ற இப்புத்தகம் தங்களுக்குக் கிடைத்துள்ளது. இதில் பெரும் பகுதி வால்மீகி ராமாயணம், அத்யாத்ம ராமாயணம், ராமசரிதமானஸம், பத்மபுராணம், ப்ரும்மாண்டபுராணம் முதலிய கிரந்தங்களிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது. சில விஷயங்கள் பரம்பரையாகக் கேட்டவை. ஆனால் அவைகளும் ஏதாவது நூல்களில் இருக்கலாம். பக்த சிரேஷ்டனான ஹனுமானின் பாவனமான புண்ணியமான வாழ்க்கையைப் படித்து பக்தர்கள் ஆனந்தமடைய வேண்டும் என்பதே விருப்பம்.

ஆசிரியர்
ஹனுமான் ப்ரஸாத் போத்தார்

ஸ்ரீஹரி: சரணம்

# பக்தராஜ ஹனுமான்

## ( 1 )

प्रनवउँ पवनकुमार खल बन पावक ग्यानघन ।
जासु हृदय आगार बसहिं राम सर चाप धर ॥

[ராமசரிதமாநஸம், பாலகாண்டம். தோஹா 17]

[நான், "வாயுபுத்திரனான ஸ்ரீஹனுமானுக்கு வணக்கம் செலுத்துகின்றேன். தீயவர்களாகிய வனத்தை அழிக்கும் நெருப்பைப் போன்றவரே! ஞானமே உருவானவரே! தங்கள் இதயத்தை வில்லும், அம்பும் ஏந்திய பகவான் ஸ்ரீராமர் தன் இருப்பிடமாகக் கொண்டுள்ளார்" என கோஸ்வாமி துளசிதாஸர் துதிக்கிறார்.]

பகவான் சிவபெருமான் ஸதீதேவியுடன் கைலாசத்தின் சிகரத்தில் வீற்றிருந்தார். ஆலமரத்தின் அடர்த்தியான நிழலில் கற்பூரத்திற்கு நிகரான அவரது வெண்மையான உடலில் பழுப்பு நிறமான ஜடைகள் பரவியிருந்தன. அவரது கையில் ருத்ராட்சமாலையும், கழுத்தில் பாம்பும், எதிரில் நந்தியும் இருந்தன. தொலைவில் அவரது துணைவர்கள் பலவிதமாய் விளையாடிக் கொண்டு மிருந்தனர். அவரது தலையில் குளிர்ந்த சந்திரனும், கங்கையின் அமுத தாரையும் இருந்ததால் நெற்றிக்கண்ணின் பயங்கரமான ஜ்வாலையும் கூட அமைதியாய் அடங்கியிருந்தது. நெற்றியில் உள்ள விபூதி மிகவும் அழகாய் இருந்தது.

தற்செயலாய் 'ராம்-ராம்' என சொல்லிக் கொண்டே தன் சமாதி நிலையிலிருந்து கலைந்தார். அபூர்வமான பாவத்துடன் சிவபெருமான் தன்னைப் பார்ப்பதை ஸதீதேவி கண்டாள். எதிரில் கைகூப்பியபடி நின்று கொண்டு வினயத்துடன் சிவபெருமானிடம்- "சுவாமி! தாங்கள் ஏதோ சொல்ல விரும்புவதுபோல் தங்களது முகத்தோற்றம் தோன்றுகிறதே. தற்சமயம் நான் தங்களுக்கு என்ன சேவை செய்யவேண்டும்?" என்று கேட்டாள். சிவபெருமான் கூறினார்- "தேவி! இன்று என் மனதில் ஒரு உயர்ந்த சுபமான சங்கல்பம் உண்டாகிறது. எவரை நான் எப்பொழுதும் தியானித்துக் கொண்டு இருக்கின்றேனோ, எவருடைய திருநாமங்களை திரும்பத் திரும்பக் கூறுவதால் என் குரல் தழுதழுக்கிறதோ, எவருடைய உண்மையான திருஉருவத்தை நினைத்து சமாதியில் மூழ்கு கின்றேனோ, அந்த பகவானான என் பிரபு உலகில் அவதரிக்க இருக்கிறார். எல்லாத் தேவர் களும் கூடவே அவதரித்து அவரது கைங்கர்யப் பேற்றை அடைய விரும்புகின்றனர். நான் மட்டும் ஏன் ஏமாந்து போகவேண்டும்? நானும் அங்கு சென்று அவருக்கு சேவை செய்து என்னுடைய பல கால ஆசையை நிறைவேற்றிக் கொண்டு என் வாழ்வை பயனுடையதாய் ஆக்கிக் கொள்வேன்."

சிவபெருமானின் இந்த வார்த்தையைக் கேட்ட ஸதீதேவியால் தக்கது எது, தகாதது எது எனத் தீர்மானிக்க முடியவில்லை. அவள் மனதில் இரண்டுவிதமான எண்ணம் எழுந்தது. முதலாவதாக என் கணவரின் விருப்பம்

நிறைவேறவேண்டும். இரண்டாவதாக எனக்கு அவருடைய பிரிவு ஏற்படக்கூடாது. சிறிது ஆலோசித்து ஸதீதேவி சொன்னாள்- "பிரபு! தங்களது சங்கல்பம் மிகவும் அழகாக இருக்கிறது. நான் எனது இஷ்டதெய்வமான தங்களுக்கு சேவை செய்ய விரும்புவதுபோல், தாங்களும் தங்களது இஷ்டதெய்வத்திற்கு சேவை செய்ய விரும்புகின்றீர்கள். ஆனால் தங்கள் பிரிவால் எனது உள்ளம் என்ன பாடுபடும்? தங்கள் சுகத்திலேயே என் உள்ளமும் சுகப்படும்படியான சக்தியைக் கருணைகூர்ந்து எனக்கு அளியுங்கள். மேலும் ஒரு விஷயம். இந்த தடவை ராவணனை அழிப்பதற்காக பகவான் அவதரிக்கின்றார். ராவணனோ தங்களுடைய சிறந்த பக்தன். தனது தலையையே வெட்டித் தங்களுக்குக் காணிக்கையாகக் கொடுத்தான். அவனை அழிக்கும் விஷயத்தில் தாங்கள் எப்படி உதவ முடியும்?"

சிரித்துக் கொண்டே சிவபெருமான் பதிலுரைத்தார்- "தேவி! நீ மிகவும் அப்பாவியாக இருக்கின்றாய். இதில் பிரிவு என்ற பேச்சுக்கே இடமில்லை. நான் ஓர் உருவத்தில் அவதரித்து ராம சேவை செய்வேன். மற்றோர் உருவத்தில் உன்னுடன் இருந்துகொண்டு உனக்கு அவர் லீலைகளைக் காட்டுவேன். அந்தந்த சமயத்தில் ராமனிடம் சென்று துதிப் பாடிப் பிரார்த்தனை செய்வேன். மற்றொரு விஷயத்தையும் நினைவு கொள். ராவணன் எப்படி என் பக்தனோ, அப்படியே என்னுடைய ஓர் அம்சத்தையும் அவமதித்துள்ளான். நான் பதினோரு உருவத்தில் இருப்பது உனக்குத் தெரியும். அவன் தனது பத்துத்

தலைகளையும் காணிக்கையாகச் செலுத்தி பூஜை செய்யும்பொழுது எனது ஓர் அம்சத்தை விட்டு விட்டு பூஜித்தான். இப்பொழுது நான் அதே அம்ச உருவில் அவனை எதிர்த்துப் போர் புரிவேன். எனது பிரபுவிற்கும் சேவை செய்தவன் ஆவேன். நான் வாயுதேவனின் வாயிலாக அஞ்ஜனையின் கருவில் தோன்றத் தீர்மானித்துள்ளேன். இப்பொழுது உன் மனதில் ஏதும் துயரம் இல்லை அல்லவா?" இதைக் கேட்ட ஸதீதேவியும் மகிழ்ச்சி எய்தினாள்.

தேவராஜனான இந்த்ரனின் அமராவதி நகரில் 'புஞ்ஜிகஸ்தலா' எனும் ஒரு அப்ஸரஸ் இருந்தாள். ஒரு நாள் அவள் ஏதோ தவறிழைத்த தனால் பூவுலகில் பெண் குரங்காகப் பிறக்கும்படி ஆயிற்று. அவள் மிகவும் வேண்டிக்கொண்டபின் சாபம் கொடுத்த முனிவர்- "அவள் விருப்பப்படி எந்த உருவையும் ஏற்கமுடியும்" என அருளினார். விரும்பியபடி குரங்கு அல்லது மனித உருவில் இருந்தாள். வானர அரசனான கேஸரீ அவளை தன் மனைவியாக ஏற்றுக் கொண்டார். அவள் மிகவும் அழகாக இருந்தாள். கேஸரீ அவளிடம் மிகவும் அன்பு காட்டினார்.

ஒரு நாள் இருவரும் மனித உருவில் சுமேரு மலையின் உச்சியில் சஞ்சரித்துக் கொண்டு இருந்தனர். மெல்லிய காற்று வீசிக் கொண்டிருந் தது. காற்றின் வேகத்தால் அஞ்ஜனையின் புடவைத் தலைப்பு விலகியது. தன்னை யாரோ தொடுவதாய் அஞ்ஜனை உணர்ந்தாள். அவள் தனது ஆடையை சரி செய்பவளாய் தனியாக வந்தாள். அதட்டியபடி "எனது கற்பை

மாசுபடுத்தும் இத்தகைய மரியாதையற்றவன் யார்? எனது இஷ்ட-தெய்வமான கணவன் எதிரில் இருக்கும்பொழுதே இப்படிச் செய்தவனை சபித்து சாம்பலாக்குகிறேன்" என்று கூக்குரலிட்டாள். "தேவி! நான் உனது கற்பை மாசுபடுத்தவில்லை. எனக்கு நிகரான வலிமையுடைய ஒரு புதல்வன் உன்னிடம் தோன்றுவான். அறிவிலும், ஆற்றலிலும் அவனுக்கு நிகர் யாரும் கிடையாது. நான் அவனைக் காப்பேன். அவன் எம்பெருமானுக்கு சேவை செய்யும் பேறு பெறுவான்" என வாயுதேவன் சொன்னார். அதன் பின் அஞ்ஜனையும், கேஸரீயும் தங்கள் இருப்பிடம் சென்றனர். சிவபெருமான் தனது அம்சமாய் அஞ்ஜனையின் காது வழியாக அவளது திருவயிற்றில் பிரவேசித்தார்.*

* * * * *

---

* जेहि सरीर रति राम सों सोइ आदरहिं सुजान।
रुद्रदेह तजि नेह बस बानर भे हनुमान॥
जानि राम सेवा सरस समुझि करब अनुमान।
पुरुषा ते सेवक भए हर ते भे हनुमान॥

(दोहावली १४२-१४३)

"எந்த சரீரத்தின் மூலம் பகவான் ஸ்ரீராமனின் அன்பு கிடைக்கின்றதோ, அதனையே சான்றோர்கள் மதிக்கின்றார்கள். இவ்வாறு ஆலோசித்து தன் ருத்ரரூபத்தைத் துறந்து பகவானின் அன்பிற்கு இருப்பிடமான, வானரர் ஹனுமானின் ரூபத்தில் தாங்கள் அவதரித்துள்ளீர்கள். இராமபிரானின் பணியை மிகவும் ஆனந்தம் தரக் கூடியதாகக் கருதி, தாங்கள் சாட்சாத் பரப்ரம்மமாக இருந்தும் தொண்டனாக ஆகிவிட்டீர்கள். இவ்விதம் பரமேஸ்வரனாகிய தாங்களே ஹனுமானாக ஆகிவிட்டீர்கள்."

संकर सुवन केसरीनंदन।
तेज प्रताप महा जग बंदन॥

[ஹனுமாந் சாலீஸா, சௌபாஈ 6]

சித்திரை மாதம் வளர்பிறையில், பௌர்ணமி திதியில் செவ்வாய்க்கிழமை* அஞ்ஜனையின் கர்ப்பத்திலிருந்து சிவபெருமான் வானர உருவில் அவதரித்தார். அஞ்ஜனை, கேஸரீ இவர்களது ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. வளர்பிறை சந்திரன்போல் வளரும் குழந்தையை வளர்ப்பதில் அவர்கள் மனம் மிகவும் ஈடுபட்டது. அஞ்ஜனை எங்கு சென்றாலும் மகனை மார்போடு அணைத்து எடுத்துச் சென்றாள். கேஸரீயும் குழந்தையை முதுகில் அமர்த்திக் கொண்டு குதித்து விளையாடும்போது குழந்தை பெறும் ஆனந்தத்தை கண்டு தானும் ஆனந்தத்தில் மூழ்கினார்.

ஒரு நாள் குழந்தையை வீட்டில் விட்டுவிட்டு பழம், புஷ்பம் கொண்டு வருவதற்காக அஞ்ஜனை சென்றிருந்தாள். அதற்கு முன்பே கேஸரீயும் வெளியில் சென்றிருந்தார். காலை வேளையில் குழந்தை வீட்டில் தனியாக இருந்தது. அதற்கு பசிக்கத் தொடங்கியது. இங்குமங்கும் பார்த்தது. ஆனால் ஏதும் அகப்படவில்லை. கடைசியில் அதன் பார்வை கதிரவன் மேல் விழுந்தது. காலைக் கதிரவனைப் பார்த்த சிறுவன்- "ஆஹா! இதோ ஒரு பெரிய, அழகான சிவந்த பழம். விளையாடவும், சாப்பிடவும் இது பயன்படும்" என நினைத்தான். அவன் சூரியனை நெருங்க முயற்சித்தான். வாயு, பறக்கும் சக்தியை முன்னமேயே குழந்தைக்கு அளித்திருந்தார். ஆனால் பரம்பொருளான சிவபிரானுக்கு இது ஒரு கடினமான காரியமா என்ன!

---

* சிலர் அனுமான் பிறந்த நாளாக கார்த்திகை க்ருஷ்ணபக்ஷ சதுர்தசியாகவும், கார்த்திகை பௌர்ணமியாகவும் சொல்கின்றனர்.

சிறுவன் வானில் தாவ ஆரம்பித்தான். தேவர்கள், தானவர்கள், யக்ஷர்கள் அனைவரும் இதைக் கண்டு வியந்தனர். வாயுதேவனின் மனதில் சந்தேகம் எழுந்தது. "எனது சின்னஞ்சிறு குழந்தை சூரியனை நோக்கித் தாவுகிறது. மதியவேளை சூரிய கிரணங்களால் இவன் தகிக்கப்படாமல் இருக்க வேண்டுமே" என எண்ணி இமயம், மலயம் முதலிய மலைகளின் குளிர்ச்சியை ஒன்று சேர்த்துத் தன் மகனின் பின்னே செல்லத் தொடங்கினார். [குளிர்ந்த காற்று வீசியது] சூரியனும் பார்த்தார். அவர் தன் திவ்ய திருஷ்டியில் சிறுவனின் மகிமையை முற்றிலும் அறிந்தார். சிவபெருமானே வானரசிசு உருவத்தில் தன்னிடம் வருவதை உணர்ந்தார். தனது தந்தைக்கு நிகரான வாயுதேவ னின் அருளால் இவன் பிறந்தான் என்பதையும், அவரே [வாயுவே] இவனைக் காப்பதற்கு வந்து கொண்டு இருக்கின்றார் என்பதையும் அவர் தெளிவாக உணர்ந்தார். தனது கோமளமான கையினால் தன் தம்பியை செல்லமாகக் கொஞ்சு வதற்காக தனது கரங்களாகிய கிரணங்களைக் குளிர்ச்சியாகச் செய்து கொண்டார். ஜகத்பிதாவான சிவபெருமானே தன்னிடம் வருவதாக நினைத்து நல்வரவு செய்தார் போலும்! அந்த சிறுவன் கதிரவனின் ரதத்தை வந்தடைந்தான். அவருடன் விளையாடத் தொடங்கினான்.

அன்று கிரஹண தினம். தனக்கான நேரம் என்பதால் ராகு சூரியனைப் பீடிப்பதற்காக வந்தான். சூரியனின் ரதத்தில் வானரச் சிறுவனொருவன் அமர்ந்திருப்பதைப் பார்த்தான். எப்போதும் போல் யாரையும் லட்சியம்

செய்யாமல் சூரியன் மேல் பாய்ந்தான். ஆனால் சிறுவனுடைய வலிமைமிக்க கைகளால் பிடிக்கப் பட்டபொழுது பயந்து போனான். எப்படியோ தன்னை விடுவித்துக் கொண்டு ஓடினான். நேராக இந்த்ரனிடம் சென்று சொன்னான்- "தேவர்களின் தலைவனே! தாங்கள் எனக்கு சூரியனைப் பிடிப்பதற்கு உரிமையளித்தீர்கள். இந்த உரிமையை வேறொருவருக்கும் இப்பொழுது கொடுத்துள்ளீர் களா என்ன?" இந்த்ரனுக்கு இது புரியவில்லை. அவர் ராகுவை அதட்டி சூரியனிடத்தில் அனுப்பினார். இரண்டாவது தடவை ராகு சென்றபொழுது சிறுவனுக்குத் தன் பசியின் நினைவு வந்தது. 'உண்பதற்கு நல்ல பொருள் இது' என எண்ணி ராகுவின் மேல் பாய்ந்தான். அந்த சிறுவனின் பேராற்றலால் ராகு பயந்து போய் தன்னைக் காப்பதற்காக இந்த்ரனை அழைத்தான். இந்த்ரன் ஐராவதத்தின் மேலேறி அவனைக் காக்க வந்தான். ஐராவதத்தைப் பார்த்த சிறுவன் ராகுவை விட்டுவிட்டு 'இது நல்ல பழம்' என எண்ணி அதைப் பிடிக்க ஓடினான். இப்பொழுது இந்த்ரன் பயந்து தன் வஜ்ரத்தை எறிந்தான். இதனால் சிறுவனது இடது தாடை அடிபட்டது. சிறுவன் காயமுற்று மலை மேல் விழுந்து துடித்தான்.

வாயுதேவன் சிறுவனை குகைக்கு எடுத்துச் சென்றார். வாயுவிற்கு இந்த்ரனிடம் மிகவும் கோபம் ஏற்பட்டு தனது கதியை [சக்தியை] அடக்கிக் கொண்டார். வாயு ஸ்தம்பித்ததால் எல்லோரும் கட்டைபோல் ஆகிவிட்டனர். மூவுலகிலும் ஒருவரும் அசையக்கூட முடியவில்லை.

எல்லோருக்கும் மூச்சு நின்றது. தேவர்கள் பயந்தனர். இந்த்ரன் பிரம்மாவிடம் ஓடிச் சென்றான். அச்சமயம் பிரம்மா மலையிலிருந்த குகைக்கு வந்து சிறுவனைத் தன் கைகளால் தொட்டு பிழைப்பிக்கச் செய்தார். சிறுவன் மகிழ்ச்சி யுடன் எழுந்து நின்றான். வாயுதேவனும் மிகவும் மகிழ்ந்து உலகம் முழுவதும் பிராணசஞ்சாரம் ஏற்படுத்தினார். தேவர்களிடம்- "இந்தச் சிறுவன் சாதாரணமானவன் இல்லை. தேவர்களின் காரியத்தை சாதிப்பதற்காகத் தோன்றியுள்ளான். ஆகையால் எல்லா தேவர்களும் இவனுக்கு வரம் அருள்வது பொருத்தமானது" என்று பிரம்மா கூறினார். "எனது வஜ்ரத்தால் இவனுடைய தாடை அடிபட்டது. எனவே இன்று முதல் இவன் ஹனுமான் [ஹனு = தாடை] எனப் பெயர் பெறுவான். எனது வஜ்ரத்தால் ஹனுமானுக்கு சிறு தீங்கும் நேராது" என இந்த்ரன் சொன்னான். சூரியன்- "எனது தேஜஸின் நூறில் ஒரு பங்கை இவனுக்கு அளிக்கின்றேன். எனது சக்தியால் இவன் தன் உருவத்தை மாற்றிக் கொள்ள முடியும். இவனுக்கு சாஸ்திரங்கள் கற்றுக் கொள்ள விருப்பம் ஏற்படும்பொழுது நான் அனைத்து சாஸ்திரங்களையும் கற்பிப்பேன். இவன் சிறந்த சொல்லாற்றல் மிக்கவனாய் இருப்பான்" என்று அருளினார். வருணன் தனது பாசத்தையும், நீரால் மரணமின்மையையும், விசுவகர்மா தன்னால் செய்யப்பட்ட திவ்ய அஸ்த்ரங்களால் வதம் ஆகாத தன்மையையும் வரமாக அருளினார்கள். குபேரன் முதலிய தேவர்கள் தங்கள் தங்கள் சக்திகளால் பயமற்ற தன்மையை ஹனுமானுக்கு அருளினார்

கள். பிரம்மா, பிரம்மஞானத்தையும், சிரஞ்ஜீவித் தன்மையையும், பிரம்மாஸ்த்ரம் மற்றும் பிரம்மபாசத்தால் கட்டுப்படாத நிலையையும் அருளினார்.

கிளம்பும் சமயம் பிரம்மா- "உனது மைந்தன் பெரிய வீரன்; விரும்பும் உருவத்தை எடுத்துக் கொள்ளத் திறனுள்ளவன்; மனதிற்கு நிகரான வேகம் உடையவன்; இவனது செயலுக்கு தடையே ஏற்படாது; அழியாப்புகழ் உடையவனாவான்; ராம-ராவண யுத்தத்தில் ராமனுக்கு உதவி செய்து, ராமனுடைய அன்புக்கு இலக்காவான்" என்று வாயுதேவனிடம் கூறினார். இவ்வாறு ஹனுமானுக்கு வரம் அருளி எல்லா தேவர்களும் தங்கள் தங்கள் இருப்பிடம் சென்றனர். இவையனைத்தையும் அறிந்த அஞ்ஜனையும், கேஸரீயும் அடைந்த ஆனந்தத்தைச் சொல்லவும் வேண்டுமா?

* * * * *

குழந்தைப் பருவத்தில் ஹனுமான் குறும்பு நிறைந்தவராய் இருந்தார். இயற்கையாகவே வானரம், குழந்தைப்பருவம் வேறு. தேவர்களால் கிடைத்த பெரும் பலமும் சேர்ந்து கொண்டது. மேலும் ருத்ரனின் அம்சமும் அல்லவா? அவர் முனிவர்களின் ஆசனங்களை எடுத்து மரத்தில் தொங்கவிடுவார். கமண்டலத்தின் ஜலத்தை கவிழ்த்துவிடுவார். கௌபீனத்தை கிழித்துவிடுவார். அவர்களின் மடியில் அமர்ந்து விளையாடுவார். தாடியைப் பிடித்து இழுத்துவிட்டு ஓடுவார். அவரைத் தடுத்து நிறுத்த யாருக்கும் வலிமையில்லை. எல்லோரும் தன்வசமிழந்து

************************************************************

இருந்தனர். பெரியவனாகிக் கல்வி கற்கும் வயதை அடைந்தார். ஆனால் அவரது குறும்புத்தனம் அப்படியே இருந்தது. அஞ்ஜனையும், கேஸரீயும் மிகவும் கவலையுற்றனர். "இந்தச் சிறுவன் திருந்த தாங்களே அருளவேண்டும்" என முனிவர்களிடம் வேண்டினர். சிறுவன் தனது பலத்தால் கர்வமடைந்துள்ளான்; தனது வலிமையை மறப்பானேயானால் சரியாகிவிடும் என நினைத்த முனிவர்கள், ஹனுமானுக்கு "உனது வலிமை உனக்கு மறந்து போகட்டும். யாராவது உனது புகழை எடுத்துச் சொன்னால், உன் வலிமை நினைவிற்கு வந்து மீண்டும் பழைய நிலையை அடைவாய்" என்று சாபம் கொடுத்தனர். ஹனுமானுக்கு தன் பலம் மறந்தது.

ஹனுமான் வித்யாப்யாசம் செய்யவேண்டிய நேரம் வந்தது. வானர அரசன் கேஸரீ தகுந்த ஸம்ஸ்காரங்களை ஹனுமானுக்கு செய்வித்து வேதங்களைக் கற்பதற்கு சூரியனிடத்தில் அனுப்பினார். சூரியனிடம் வேதம், வேதத்தின் அங்கங்கள் அனைத்தையும் கற்றார். சாட்சாத் சிவனான அவர் கற்றுத்தான் அறிந்து கொள்ள வேண்டுமா, என்ன? சம்பிரதாயப் பரம்பரையைக் காப்பதற்காகவே எல்லா வித்தைகளையும் குருமுகமாகக் கற்றார். சில நாட்களிலேயே பெற்றோரிடம் திரும்பினார். சூரியனின் அருளால் தமது குழந்தை எல்லா வித்யைகளிலும் சிறந்து விளங்குவதைக் கண்டு பெற்றோர்கள் மகிழ்ந்தனர்.

* * * * *

பகவான் ஸ்ரீராமன் அவதரித்தார். இராமபிரானின் பாலலீலைகளைப் பார்க்கும் ஆவலில் சிவபெருமான் அயோத்திக்கு வந்தார். ஒரு நாள் ஜோதிடனாக மாறி, இராமபிரானின் கையைப் பிடித்துப் பார்த்தார். ஒரு நாள் துறவியாக மாறி ஆசீர்வாதம் செய்தார். ஒரு நாள் இராமபிரான் விளையாடுவதற்காக அரண்மனை யிலிருந்து வெளிவந்த பொழுது ஒரு குரங்காட்டி வந்தான். அவனுடன் ஒரு அழகிய குரங்கு இருந்தது. குரங்காட்டி உடுக்கை அடித்துக் கொண்டே அரண்மனையின் பெரிய வாயிலுக்கு வந்தான். நிறையச் சிறுவர்கள் கூடினர். இராமபிரானும் சகோதரர்களுடன் அங்கு வந்தார். பகவானை மகிழ்விக்க ஹனுமான் உருவில் வந்த சிவபெருமான் அல்லவா இந்த குரங்கு! இது சாதாரண குரங்கல்லவே. ஆட்டுவிக்கும் குரங்காட்டியும், ஆடுகின்ற குரங்கும் அவனே. தன் பிரபுவின் இனிய லீலைகளைக் காண்பதற்காகவும், அவருடன் விளையாடுவதற்காகவும், அவரை மகிழ்விப்பதற்காகவும்தானே இவையனைத்தும்.

இறுதியில் பகவான் சந்தோஷமடைந்தார். குரங்கின் ஆட்டத்தைப் பார்த்த அனைவரும் திரும்பினர். ஆனால் இராமபிரானோ இந்த குரங்கு தனக்கு வேண்டுமெனப் பிடிவாதம் பிடித்தார். அவரது பிடிவாதத்தை எவ்விதம் நீக்க முடியும்? தசரத மகாராஜா- "குரங்குக்குப் பதில் குரங்காட்டி விரும்பும் அளவு பணம் கொடுங்கள். குரங்கை குழந்தை ராமனிடம் கொடுத்துச் செல்லட்டும்" என்றார். குரங்காட்டி பணத்திற்காக வந்தவன் இல்லையே. தன்னையே பிரபுவின்

சரணத்தில் அர்ப்பணிப்பதற்காக அல்லவா வந்தான். இராமபிரான் தன் கைகளால் அந்த குரங்கைப் பற்றிக் கொண்டார். இத்தனை நேரமும், தானே தன்னை ஆட்டுவித்துக் கொண்டிருந்தது அது. தற்போது ஆட்டுவிப்பவன் ராமனாகவும், ஆடுகிறவன் தானாகவும் மாறிவிட்டது. நெடுங்கால ஆசை பூர்த்தி ஆயிற்று. அது அளவு கடந்த ஆனந்தத்துடன் ஆடியது. குரங்கின் ஆட்டத்தைப் பார்த்து அனைவரும் தன்மயமாயினர். குரங்காட்டி தலைமறைவானான். குரங்காட்டி குரங்கினுள் மறைந்தானோ அல்லது தனது காரியம் நிறைவேறிவிட்டது என கைலாசம் தான் போனானோ! யாருக்குத் தெரியும்?

இந்த உருவில் ஹனுமான் பல காலம் இராமபிரானுக்கு சேவை செய்து, இன்புறச் செய்து வந்தார். விசுவாமித்திரர் ராம-லக்ஷ்மணர் களை அழைத்துச் செல்ல வந்தபோது இராமபிரான் தனிமையில் ஹனுமானிடம் சொன்னார்- "ஹனுமான்! நீ எனது அந்தரங்கத் தோழன். எனது லீலைகளைப் பற்றி நீ அறியாதது எதுவும் இல்லை. பின்னர் ராவணனை அழிக்க நேரும் காலத்தில் எனக்கு வானரர்களின் உதவி தேவைப்படும். ராவணன் வாலியிடம் நட்பு கொண்டுள்ளான். கரன், தூஷணன், திரிசிரஸ், சூர்ப்பணகை முதலியோர் தண்டகாவனத்தில் உள்ளனர். மாரீசன், ஸுபாஹு, தாடகை முதலானோர் நம் அருகிலேயே உள்ளனர். அவர்களது சூழ்ச்சி நாற்புறமும் வலைபோல் பின்னப்பட்டுள்ளது. நீ சபரியை சந்தித்து ருச்யமூக மலைக்குச் சென்று ஸுக்ரீவனிடம் நட்பு

கொண்டிரு. நான் மெல்ல மெல்ல வழி ஏற்படுத்திக் கொண்டு உன்னை அடைய அங்கு வருவேன். நீ ஸுக்ரீவனை என்னிடம் சேர்த்துவிடு. வானரப் படையை ஒன்றுகூட்டி வை. பின் ராவணனை அழித்து அவதார காரியத்தை நிறைவேற்றுவோம்."

பகவானை விட்டுப் பிரிய மனமில்லாவிடினும் ஹனுமான் பகவானின் ஆணையை சிரமேற்கொண்டு, ராமநாம ஸ்மரணையுடன் ருச்யமூக மலைக்குக் கிளம்பினார்.

* * * * *

( 2 )

அந்நாட்களில் வாலியிடம் பயந்த ஸுக்ரீவன் தன் அமைச்சர்களுடன் ருச்யமூக மலையில் தங்கியிருந்தார். ஹனுமானும் கூட இருந்தார். சாபத்தின் காரணமாக வாலி அங்கு வர இயலாது என்றாலும், தனக்கு உற்றவர் யாரையாவது அனுப்பித் தன்னை அவன் தாக்காமல் இருக்க வேண்டுமே என ஸுக்ரீவன் எப்போதும் பயந்தபடி இருந்தார். ஒரு நாள் ஸுக்ரீவன் தனது அமைச்சர்களுடனும், இனிய தோழனான ஹனுமானுடனும் அமர்ந்து சில ராஜநீதிகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். தற்செயலாய் அவர் பார்வை பம்பாஸரஸ்ஸின் பக்கம் சென்றது. ஆயுதங்களுடன் அங்கு இருவர் நிற்பதைப் பார்த்தார். அவர்களது நோக்கம் தெற்றெனப் புலப்படாவிட்டாலும் அவர்கள் ஏதோ ஒன்றைத் தேடுவது அவருக்குப் புரிந்தது. அவர்களது நடை, மாவீரர்களுக்கே ஏற்ற

உடற்கட்டு, அவர்களது அஸ்த்ர-சஸ்த்ரங்கள், மரஉரி, ஜடை இவற்றைப் பார்த்த ஸுக்ரீவனுக்குப் பெருத்த ஐயம் ஏற்பட்டது. அவர் ஹனுமானிடம், "சகோதரா! இந்த இரண்டு வீரர்களும் யார் என்பதைத் தெரிந்து வா. எதிரிகளைச் சேர்ந்தவர்களாயின் இங்கிருந்து ஓடிவிடவேண்டும். அவ்வாறின்றி எதிரிகளின் தொடர்பில்லாதவர்களாகவும், உதவி வேண்டுபவர் களாகவும் இருந்தால், அவர்களிடம் நட்புக் கொண்டு ஒருவருக்கொருவர் உதவியாயிருக்கலாம். நீ பிரம்மசாரி உருவத்துடன் சென்று அவர்களைப் பற்றித் தெரிந்து கொண்டு, பின்னர் குறிப்பால் எனக்கு உணர்த்தவும்" என்று கூறினார்.

ஸுக்ரீவன் கூறியபடி ஹனுமான் அந்தண உருவம் தாங்கி அவர்களிடம் சென்றார். தகுந்த முகமன் கூறி, அந்த இருவரையும் புகழ்ந்து கொண்டே அவர்களைப் பற்றி வினவினார். ஹனுமான் கூறலுற்றார்- "தங்கள் ஆயுதங்களையும், வீரர்களுக்கேற்ற உடலமைப்பையும் பார்த்துத் தாங்கள் வீரபுருஷர்கள் என்ற எண்ணம் ஏற்படுகிறது. தங்களது கோமளமான திருவடி களைப் பார்த்தால் தாங்கள் அரண்மனையில் வசிப்பவர் எனத் தோன்றுகிறது. தாங்கள் காடு, மலைகளில் வசிக்கத் தக்கவரில்லை. தங்களது ஆடை அணிகலன்களைப் பார்த்தால் தாங்கள் ரிஷிகுமாரர்களோ எனச் சொல்லத் தோன்றுகிறது. ஆனால் எதுவும் நிச்சயிக்க முடியவில்லை. தாங்கள் சாதாரணமானவர்கள் அல்ல; அலௌகிகர்கள் எனத் தங்களது முகப்பொலிவே தெளிவாகச் சொல்கிறது. தாங்கள் மும்மூர்த்திகளில் ஒருவரோ? அல்லது சாட்சாத் நரநாராயணர்

களோ? என்று என் மனதில் பெரும் சந்தேகமாய் உள்ளது. தங்களிடம் அனைவரையும் ஈர்க்கும் கவர்ச்சி தெரிகின்றது. தங்களது அழகிலும், இனிமையிலும் என் உள்ளம் மூழ்கிக் கொண்டிருக் கிறது. தாங்கள் என்மீது அளவற்ற அன்புடைய வராகத் தோன்றுகிறீர்கள். எப்பொழுதோ நான் தங்களுடன் இருந்துள்ளேன் என என் மனம் மீண்டும் மீண்டும் கூறுகிறது. கருணையுடன் எனது இந்த சந்தேகத்தை நீக்கவேண்டும்."

இராமபிரான் புன்சிரிப்புடன் ஹனுமானின் வார்த்தையைக் கேட்டுக் கொண்டிருந்தார். லக்ஷ்மணனைப் பார்த்து இராமபிரான்- "இந்த அந்தணன் பெரிய அறிவாளி. இவன் அங்க, உபாங்கங்களுடன் வேதங்களை அத்யயனம் செய்துள்ளான் என்பது இவன் வார்த்தை களிலிருந்து தெரிகிறது. இவன் பேச்சில் சிறு தவறுகூட இல்லை. தவறான எண்ணத்தைக் காட்டும்படியான எந்த லட்சணமும் இவனது முகமண்டலத்தில் தென்படவில்லை. இவன் எந்த அரசனுக்கும் அமைச்சனாகத் தகுந்தவன். சீரிய உச்சரிப்பு, நீதி அறிவு இவை இரண்டும் இவனுக்கு கம்பீரமும், பெருமையும் தரத்தக்கவை" என்று கூறினார். இராமபிரானின் குறிப்பை உணர்ந்த லக்ஷ்மணன் ஹனுமானிடம் கூறலுற்றார்- "பிராமணதேவரே! நாங்கள் அயோத்தியா நகரப் பேரரசர் தசரதனின் மைந்தர்கள். அவரது ஆணையின்படி பதினான்கு வருட வனவாசத்திற் காக வந்துள்ளோம். யாரோ ஒரு அரக்கன் ஜனகரின் மகள் ஸீதையை கவர்ந்து சென்றுள்ளான். நாங்கள் அவரைத் தேடி இங்கு

அலைந்து கொண்டு இருக்கின்றோம். தாங்கள் யார் என்று கூறுங்கள்."

லக்ஷ்மணன் பேச்சை முடிப்பதற்குள்ளாகவே ஹனுமானின் உருவம் மாறியது. அவர் வானர உருவில் பகவானின் திருவடிகளில் விழுந்தார். பகவானின் எதிரில் உருமாறி வந்து பகவானிடம் கபடமாக நடந்ததால்தான் அவர் தன்னிடம் பேசவில்லை என்று ஹனுமானது மனது கூறியது- "நான் அவரை அறியாததால் அவரும் என்னை அறியாததுபோல் இருந்தார் போலும். நான் அவரது அறிமுகம் கேட்டதால் அவரும் என் அறிமுகம் கேட்டார் போலும். எனது பொய்மையின் பலன் தானோ இது. நான் பெருந்தவறிழைத்துவிட்டேன்." இவ்வாறு நினைத்து நினைத்து அவரது கண்களில் கண்ணீர் பெருகியது. அவர் பகவானின் திருவடிகளில் விழுந்து புரண்டார். பகவான் அவரை வலுவில் தூக்கி மார்போடு அணைத்துக் கொண்டார்.

ஹனுமான் சொன்னார்- "பிரபோ! நான் ஒரு விலங்கு. சாதாரண ஜீவன். நான் தங்களை மறந்தேன்; தவறு செய்தேன். இது இயற்கை. ஆனால் தாங்கள் எப்படி என்னை மறந்தீர்கள்? நான் தங்கள் ஆணையின்படி ஸுக்ரீவனிடம் வந்து பல நாட்களாகத் தங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஸுக்ரீவனும் பெருந்துயரம் அனுபவித்து வருகிறார். அவருக்குத் தங்களை அறிமுகப்படுத்தி ஆறுதல் அளிக்கிறேன். தங்களிடம் வைக்கும் நம்பிக்கை ஒன்றுதான் அவருக்கு தற்போது ஒரே கதி. தாங்கள் வந்து, அதை ஏற்று அவரது விபத்தை நீக்கி அவருடைய சேவையை ஏற்றுக் கொள்ளுங்கள்." ஹனுமான் ஆனந்தத்தில்

மூழ்கி இரு சகோதரர்களையும் தோள்களில் ஏந்தி ஸுக்ரீவனிடம் அழைத்துச் சென்றார்.

இராமபிரானுக்கும், ஸுக்ரீவனுக்கும் நட்பு மலர்ந்தது. அக்னியை சாட்சியாக வைத்து நட்புறவு ஏற்படுத்திக் கொண்டனர். வாலி அழிந்து ஸுக்ரீவன் வானர அரசனாக ஆனார். மழைக்காலம் வந்தது. ராமலக்ஷ்மணர்கள் ப்ரவர்ஷண மலையில் வாசம் செய்தனர். ஸுக்ரீவன் சிற்றின்பத்தில் மூழ்கி ராம கைங்கர்யத்தை மறந்தார். ஹனுமான் எப்படி மறப்பார்? அவர் அடிக்கடி ஸுக்ரீவனுக்கு நினைவுபடுத்தினார். ஆனால் ஸுக்ரீவன் கேட்டும் கேட்காமல் இருந்துவிட்டார். ஸுக்ரீவன் அலட்சியப் படுத்துவதைப் பார்த்த லக்ஷ்மணன் மிகவும் சினமடைந்தார். குரங்குகளும், கரடிகளும் கொண்ட பெரும் படை ஆஞ்ஜனேயரால் அழைத்து வரப்பட இருக்கிறது என்று கூறி தாரை அவரை சமாதானப்படுத்தினாள். இந்த முயற்சியை அறிந்த லக்ஷ்மணன் ஸுக்ரீவனிடம் மகிழ்ச்சி கொண்டார். ஸுக்ரீவன் இராமபிரானிடம் வந்து தனது அசட்டைக்கு மன்னிப்புக் கோரினார். இராமபிரானின் முன்னிலையில் எல்லா இடங்களையும் விவரித்து ஸீதையைத் தேடுவதற்கு வானரப்படையை ஸுக்ரீவன் அனுப்பத் தொடங்கினார். ராவணன் ஸீதையைத் தென் திசையில்தான் எடுத்துச் சென்றான் என்றாலும், வானரர்கள் தேடுவதைப் பார்த்து வேறு எங்காவது ஒளித்து வைத்திருந்தாலும் கண்டுபிடிக்கலாம் என்பதற்காகவே நாற்புறமும் வானரர்களை அனுப்பினார். "எவன் ஒரு மாதத்தில் குறிப்பிட்ட இடங்களைத் தேடி வரவில்லையோ, அவனை

கடுமையாக தண்டிப்பேன்" என ஸுக்ரீவன் ஆணையிட்டார். அவரவர்களுக்குக் குறிக்கப்பட்ட திசையில் வானரர்கள் பயணப்பட்டனர்.

தென் திசையில் தேடுவதே முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது. ஆகையால் இக்காரியம் முக்கியமான வானரர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. ஜாம்பவான், ஹனுமான், அங்கதன், நளன், நீலன் முதலியவர்களை அழைத்து அவர்களின் காரியத்தின் மேன்மையை ஸுக்ரீவன் அறிவித்தார். "இந்த வீரர்கள் நிச்சயம் காரியத்தை முடிப்பார்கள். விசேஷமாய் ஹனுமானுக்கு முடியாதது எதுவுமில்லை" என அவர் மனதில் அப்போது தோன்றியது. அவர் மிகுந்த மகிழ்ச்சியுடனும், அன்புடனும் சொன்னார்- "ஹனுமான்! நீர், நிலம், வானம் ஆகிய அனைத்திடங்களிலும் உன்னால் தடையின்றிச் செல்ல முடியும். உன்னைத் தடுப்பதற்கு அமரருலகிலும், அண்டவெளியிலும் யாரும் கிடையாது. உனது தந்தைக்கு நிகரான நடை, வேகம், ஆற்றல், சுறுசுறுப்பு உடையவன் நீ. உனக்கே எல்லாம் தெரியும். நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை. இடங்களை மட்டும் பார்த்து வருவது உன் வேலையில்லை. ஸீதையைப் பார்த்து வருவதே உன் பணி. நீ ஸீதையைப் பார்த்து மீள்வாய் என்பதில் எனக்கு முழு நம்பிக்கை உண்டு."

ஸுக்ரீவனின் கூற்றைக் கேட்ட இராமபிரான் ஹனுமானை அழைத்தார். ஏற்கனவே பகவானுக்குத் தெரிந்திருந்தாலும் ஸுக்ரீவனின் வார்த்தையால் மேலும் நினைவு வந்தது. ஹனுமானிடம் சொன்னார்- "ஆஞ்ஜனேயா! நீ எனது காரியத்தை அவசியம் முடித்துக்

கொடுப்பாய். எனது இந்த கணையாழியை எடுத்துச் செல். இதைப் பார்த்து ஸீதை நீ ராமதூதன் என்பதை நம்புவாள்." ஸீதையிடம் சொல்வதற்குச் செய்தியும் சொல்லியனுப்பினார். ஹனுமான் முதலானோர் ஸ்ரீராமசரணங்களை வணங்கி அங்கிருந்து சென்றனர்.

* * * * *

ஹனுமான், ஜாம்பவான், அங்கதன் முதலானோர் தேடித் தேடிக் களைத்தனர். பசியாலும், தாகத்தாலும் கலங்கிப் போனார்கள். தண்ணீர் எங்கும் தென்படவில்லை. பழங்கள் இருக்குமிடமும் பலநாட்களாகத் தெரியவில்லை. எல்லாப் பொறுப்பும் ஹனுமான் மேல் வீழ்ந்தது. கம்பீரமான மலைச் சிகரத்தில் ஏறி அவர் பார்த்தபோது அருகிலேயே நல்ல பசுமை தென்பட்டது. அழகான சில பறவைகள் தமது நனைந்த இறக்கைகளைச் சிலிர்த்துக் கொள்ளும் போது அவற்றிலிருந்து நீர்த்துளிகள் சிதறுவதையும் பார்த்தார். அழகிய தோட்டமும், நீர்த்தேக்கமும் இருக்கும் என உணர முடிந்தது. எல்லோரையும் அழைத்துக் கொண்டு அங்கு சென்றார். அங்கு சென்று பார்த்தால் ஒரு குகையிலிருந்து இவைகள் வெளி வருவது தெரிந்தது. ஒருவர் மற்றவர் கையைப் பற்றியவாறு, ராமநாமஸ்மரணை செய்து கொண்டே குகையில் நுழைந்தனர். அது மிக அழகிய குகை. அங்குள்ள அருவியில் உள்ள நீர், அமுதம் போன்று சுவையாக இருந்தது. பொன்னிறமான மரத்தில் இனிய பழங்கள் அழகாகத் தொங்கிக் கொண்டிருந்தன. அங்குள்ள

தபஸ்வினியின் அனுமதி பெற்று கனிகளை உண்டு அனைவரும் பசியாறிப் புத்துணர்வு பெற்றனர்.

தபஸ்வினி கேட்க ஹனுமான் முழு விபரத்தையும் சொன்னார். விரைவில் அங்கிருந்து வெளியேறும் விருப்பத்தையும் தெரிவித்தார். அந்த தபஸ்வினி- "தம்பி! இங்கு வந்து உயிருடன் யாரும் திரும்ப முடியாது. இடையூறு இல்லாமல் தவம் இயற்றுவதற்கான இடம் இது. யாராவது திரும்பிச் சென்றால் தவத்திற்கு இடையூறு ஏற்படும். ஆனால் நீ எனக்கு ராமகதை சொன்னாய். ஆகையால் தவவலிமையால் உங்களை இங்கிருந்து வெளியில் கொண்டு விடுகிறேன். நானும் ஸ்ரீராமதரிசனத்திற்காக ப்ரவர்ஷண பர்வதம் செல்ல வேண்டும். நீங்கள் அனைவரும் கண்களை மூடிக் கொள்ளுங்கள்" என்றாள். வானரங்களும், கரடிகளும் தங்கள் தங்கள் கைகளால் கண்களை மூடிக் கொண்டனர். கணநேரத்தில் அவர்கள் கடற்கரையில் உயரமான மலைமேல் தாங்கள் இருப்பதைக் கண்டனர். ஹனுமானிடம் விடைபெற்றுக் கொண்டு தபஸ்வினி ஸ்ரீராமதரிசனத்திற்காகச் சென்றாள்.

* * * * *

அங்கதன் கூறினான்- "தோழர்களே! தற்பொழுது ஒரு மாதம் கடந்துவிட்டது. ஸீதையைப் பற்றிய விபரம் எதுவும் தெரியவில்லை. தேடவேண்டிய இடங்களுக்கெல்லாம் நாம் போகவும் இல்லை. தற்பொழுது திரும்பிச் சென்றால் ஸுக்ரீவன் நிச்சயம் மரண தண்டனை அளிப்பான். ஆகவே நான் இங்கேயே தங்கித் தவம் செய்வதாய் உள்ளேன். நீங்கள்

திரும்பிச் செல்லுங்கள்." ஹனுமான் கூறினார்- "இளவரசே! தாங்கள் ஏன் வீணாக தைரியத்தை இழக்கின்றீர்கள்? ஸுக்ரீவன் தங்களிடம் மிகவும் அன்பு கொண்டுள்ளார். தாங்கள் உள்ளத்தாலும், உயிராலும் இராமபிரானுடைய காரியத்தை நிறைவேற்ற முயற்சிப்பவர். குகையில் நுழைந்ததால் நமக்கு தாமதம் ஏற்பட்டது. ஸுக்ரீவன் நிச்சயம் மன்னிப்பார். தங்களை அரசனாகவும் ஆக்குவார். தாங்கள் பயப்பட வேண்டாம். இராமபிரான் கருணாமூர்த்தி. அவர் தங்களை எப்படியும் ரக்ஷிப்பார். கிளம்புங்கள். நாம் நமது சக்திக்கு ஏற்றபடி அவரது ஆணையை நிறைவேற்றுவோம். தாங்கள் ஸுக்ரீவனிடம் வெறுப்புற்று, அரசரான அவரால் தொல்லை ஏற்படும் என்று இங்கேயே ஒளிந்து கொண்டு தப்ப நினைத்தாலும் அது முடியாது. தாங்கள் ராம காரியத்திலிருந்து நழுவி, உயிரை எங்கு ஒளித்து வைத்தாலும், லக்ஷ்மணனின் பாணங்களிலிருந்து தப்ப இயலாது. அவருடைய காரியத்தையும் செய்ய முடியவில்லை, அவரிடமிருந்து தப்பவும் முடியவில்லை எனும் போது அவரிடம் செல்வதே சரி. அவர் என்ன செய்தாலும் சரி. ஹனுமானின் வார்த்தையைக் கேட்ட அங்கதன் உயிருடன் இருக்கும் எண்ணத்தை விட்டுவிட்டான். ஆனால் ஸுக்ரீவனிடம் செல்வதைக் காட்டிலும், உணவு இல்லாமல் உயிர் துறப்பது நல்லது என எண்ணினான். அவனுடன் எல்லோருமே உண்ணா நோன்பு மேற்கொண்டனர். இராமபிரானைப் பற்றிய பேச்சு துவங்கியது.

அந்த சமயத்தில் ஸம்பாதியை தரிசித்தனர். அவரிடமிருந்து ஸீதையை பற்றிய விஷயம் தெரிந்து

கொண்டனர். எல்லா வானரங்களும் கடற்கரையில் ஒன்று கூடினர். யார் அக்கரை செல்ல முடியும் என ஆலோசனை நடந்தது. அங்கதனின் உணர்ச்சி மிகுந்த பேச்சிற்குப்பின் அனைவரும் அவரவர் சக்தியைத் தனித்தனியே தெரிவித்து, கடலைத் தாண்டுவதற்குத் தம் திறமையின்மையை வெளிப் படுத்தினர். அங்கதனும்- "நான் எப்படியாவது தாண்டிவிடுவேன். ஆனால் திரும்புவேனோ, மாட்டேனோ என்று சிறிது சந்தேகம் உள்ளது" என்று கூறினான். ஜாம்பவான்- "தாங்கள் இளவரசர்" என்று மரியாதையுடன் கூறி அவன் செல்வதற்கு தடை செய்தார். அவரும் தனது முதுமை காரணமான தனது இயலாமையைத் தெரிவித்தார். இதுவரை ஹனுமான் மௌனமாய் இருந்தார். ஒரு மூலையில் அமர்ந்து எல்லா விஷயங்களையும் கேட்டுக் கொண்டிருந்தார். அங்கதன் நம்பிக்கை இழந்தான். ஸீதையின் இருப்பிடம் தெரிந்தபொழுது வானரர்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி, தற்பொழுது எங்கோ மறைந்தது. ஜாம்பவான் அங்கதனிடம்- "இளவரசே! தன்னம்பிக்கையை இழக்க வேண்டாம். கடலைக் கடப்பதற்கு பலம் மட்டும் போதாது. அறிவுக் கூர்மையும் தேவை. இதற்காக சிவபெருமானே அவதரித்துள்ளார். அரக்கர்களின் அழிவு நிச்சயம் ஏற்படும்" என்று கூறினார். மேலும் ஹனுமானைப் பார்த்துப் பகர்ந்தார்- "ஹனுமானே! நீ மௌனமாய் ஏன் அமர்ந்து இருக்கின்றாய்? ராம கைங்கர்யத்திற்காகத்தானே உனது பிறவி. வாயுகுமார! உனது தந்தையைப் போலவே நீயும் ஒரு கணத்தில் கடலைக் கடக்கக் கூடியவன். உனது அறிவுத்திறன் நிகரற்றது. நீ விவேகத்

திற்கும், ஞானத்திற்கும் இருப்பிடம். தன்னிடம் இவ்வளவு பெருமைகளை வைத்துக் கொண்டு ஏன் பேசாமல் அமர்ந்து இருக்கின்றாய்?" மேலும் ஹனுமானின் பிறவி, தேவதைகள் வரமளித்த விபரம், முனிவர்களின் சாபம் இவற்றைக் கூறி, "நீ நினைத்ததை முடிப்பவன்" என அவரது எல்லையற்ற சக்தியை நினைவுபடுத்தினார்.

ஹனுமான் எப்பொழுதும் இடைவிடாத பகவத் ஸ்மரணத்தில் தன்மயமானவர். அவருக்குத் தன் பலம் நினைவு வரவில்லை. ஜாம்பவானின் வார்த்தையைக் கேட்டதும் தன்னிடமுள்ள எல்லையற்ற சக்தியை உணர்ந்தார். தன்னிடம் பகவானின் எல்லையற்ற அருள் நிரம்பியுள்ளதை யும், பகவானின் சர்வசக்தியே தனது சக்தி என்பதையும் உணர்ந்தார். அவரது உருவம் வளர்ந்து மேரு மலைபோல் ஆயிற்று. அவர் கர்ஜித்துக் கொண்டே- "இந்த கடல் என்ன? இராமபிரானின் கருணையால் இதுபோன்ற நூற்றுக்கணக்கான கடலை நான் தாண்டுவேன். இலங்கையில் ஸீதை கிடைக்காவிடில் ஸ்வர்கத்தி லிருந்து பிரும்மலோகம் வரை தேடுவேன். இலங்கையோடு சேர்த்துத் திரிகூட மலையையே பெயர்த்து எடுப்பேன். ராவணனை வதம் செய்வேன். ஸ்ரீராம காரியத்தைச் செய்யும் என்னைத் தடுக்கும் சக்தி எங்கும் கிடையாது" என்றார். ஹனுமானின் கர்ஜனையைக் கேட்ட வானரப் படையனைத்தும் மகிழ்ச்சிக்குரல் எழுப்பியது. "ஹனுமானே! நீ எல்லாம் செய்ய சக்தியுடையவன். ஆனால் தற்பொழுது இது எதையும் செய்யத் தேவையில்லை. ஸீதையைப் பார்த்துவிட்டு மட்டும் வா. பகவான்

இராமபிரானுடன் நாம் அனைவரும் இலங்கை செல்வோம். பகவானின் பாணங்களால் ராக்ஷஸர் களுக்கு நற்கதி கிடைக்கும். இராமபிரானுக்கும் புகழ் உண்டாகும். நாம் அனைவரும் ஆனந்த உத்ஸவம் கொண்டாடுவோம்" என்று ஜாம்பவான் சொன்னார். ஜாம்பவானின் வார்த்தையைக் கேட்ட ஹனுமான் குதித்தபடி ஒரு உயரமான மலையின் உச்சியில் ஏறினார். அவரது காலடிபட்டு மலைச் சிகரங்கள் உடைந்து சிதறின. பெரிய பெரிய மரங்கள் ஆகாயத்தில் கிளம்பி, ஹனுமானை பூஜிப்பதுபோல் புஷ்பங்களை சொரிந்தன. தேவர் கள் ஜயகோஷம் செய்தனர். முனிவர்கள் சாந்தி பாடம் படித்தனர். வாயு அனுகூலமாய் இருந்தார். கடலின் மறுகரைக்கு செல்வதற்கு ஹனுமான் எழும்பினார். இராமபிரானை ஸ்மரித்துக் கொண்டே வானரர்களிடம்- "என் மனதில் பெரும் மகிழ்ச்சி தோன்றுகிறது. பகவானின் எல்லையற்ற கருணையை உணர்கிறேன். காரியத்தை முடித்துக் கொண்டு விரைவிலேயே திரும்புவேன். நீங்கள் பயப்பட வேண்டாம்" என்று சமாதானப்படுத்திக் கொண்டே நாமகோஷம் செய்தபடி கிளம்பினார்.* அவரது வேகத்தால் இழுக்கப்பட்டு பல மரங்கள்

---

जयत्यतिबलो रामो लक्ष्मणश्च महाबलः ।
राजा जयति सुग्रीवो राघवेणाभिपालितः ॥३३॥
दासोऽहं कोसलेन्द्रस्य रामस्याक्लिष्टकर्मणः ।
हनूमाञ्शत्रुसैन्यानां निहन्ता मारुतात्मजः ॥३४॥
न रावणसहस्रं मे युद्धे प्रतिबलं भवेत् ।
शिलाभिश्च प्रहरतः पादपैश्च सहस्रशः ॥३५॥
अर्दयित्वा पुरीं लङ्कामभिवाद्य च मैथिलीम् ।
समृद्धार्थो गमिष्यामि मिषतां सर्वरक्षसाम् ॥३६॥

[வால்மீகி ராமாயணம், ஸுந்தரகாண்டம் 42/33-36]

அவருடனேயே கிளம்பின. மேகக் கூட்டங்கள் அவரது சரீரத்தின் வலிமையான ஸ்பர்சத்தால் சிதறியவைகளாய் அவர் மேல் குளிர்ந்த நீர்த் திவலைகளைப் பொழிந்தன. ஆஞ்ஜனேயர் எதையும் லட்சியம் செய்யாமல் ஆகாயமார்க்கமாய்ச் சென்று கொண்டிருந்தார்.

"இராமபிரானின் முன்னோர்களாலேயே நான் ஏற்படுத்தப்பட்டேன். ஆனால் அவர்களுக்கு நான் எதுவும் உபகாரம் செய்ததில்லை. ராவணன் என் நடுவில் தான் வசிக்கிறான் என்பதால், ஒருவிதத்தில் ஸீதாபஹரணத்தில் எனக்கும் சம்பந்தம் உண்டு என இராமபிரான் நினைக்கலாகாது. நான் ராவணனின் கோட்டைக்கு அகழியாகவும் இருக்கிறேன். எனவே ஸ்ரீராமனுடைய தூதனை வரவேற்று அவனது ஓய்வுக்கு வழிவகுப்பேனேயானால் இந்த களங்கத்திலிருந்து தப்புவேன்" என கடல் நினைத்து மைநாக மலையிடம் ராமதூதனை வரவேற்கக் கூறியது. மைநாகம் பெரும் உருவம் தாங்கி நீர்ப்பரப்புக்கு மேல் வந்தது. ஹனுமான் ஏதோ இடையூறு ஏற்பட்டுள்ளதாக நினைத்தார். அவர் தன் கால்களின் வலிமையினால் அதை பாதாளத்தில் அழுத்த முனைந்த போது மைநாகம் மனித உருவம் தாங்கி மலையின் உச்சியின் மேல் நின்று விண்ணப்பிக்கலாயிற்று- "ஹனுமானே! நீ எனது நண்பனான வாயுவின் மைந்தன். இந்த்ரன் வஜ்ரத்தால் மலைகளின் இறக்கைகளை வெட்டிய போது, நான் உனது தந்தையின் உதவியால் கடலில் மறைந்து கொண்டு, என்னைக் காத்துக் கொண்டேன். நான் உனக்கு ஓய்வு ஏற்படுத்தித்தர

விரும்புகிறேன். நீ என் மீது அமர்ந்து, சிறிது களைப்பை நீக்கிக் கொண்டு போகலாம். இராமபிரானுக்கு செய்யும் சேவை அனைத்துலகத் திற்கும் செய்யும் சேவையன்றோ! ராமதூதனுக்கு செய்யும் உதவி அனைத்துலகத்திற்கும் செய்யும் உதவியாகும். எனது இக்கோரிக்கையை ஏற்க வேண்டுகிறேன்."

ஹனுமான் பேரன்புடன் தனது கைகளால் மைநாகத்தைத் தொட்டுச் சொன்னார்- "மைநாகமே! நீ என்னிடத்தில் மிகவும் அன்பு கொண்டுள்ளாய். நீ எனது தந்தைக்கு நிகராக வணங்கத்தக்கவன். நான் உனது ஆணையை நிறைவேற்ற விரும்பினாலும், தற்சமயம் ராம காரியமாகச் செல்கிறேன். எனது உள்ளம் ராம கைங்கர்யத்தில் துடிக்கிறது. நான் ஓய்வு எடுத்துக் கொண்டால் உடலை இங்கேயே விட்டுவிட்டு எனது உள்ளம் இலங்கைக்குச் சென்றுவிடும். தற்சமயம் ஒருகணம்கூட நான் நிற்க முடியாது. என்னை மன்னித்துவிடு." போகிற போக்கிலேயே இவ்விதம் கூறியவாறு, ஹனுமான் தமது பயணத்தைத் தொடர்ந்தார்.

ஹனுமானுக்கு வலிமை இருக்கிறது. அவரது வித்யாஞானத்திற்கும் பல தடவை பரீக்ஷை வந்துள்ளது. ஆனால் அரக்கர்களின் நடுவில் மாட்டிக் கொண்டால் மீள்வதற்கான அறிவுத் திறமை உண்டா என அறிய தேவர்கள் ஆர்வம் கொண்டனர். ஹனுமானை சோதிப்பதற்காக தக்ஷனின் மகளும், கச்யபரின் மனைவியும், நாகர்களின் தாயாருமான ஸுரஸாவை அனுப்பி னர். அவள் ஹனுமானின் பாதையில் குறுக்கிட்டு-

"இன்று எனக்கு விதிவசமாய் ஆஹாரம் கிடைத்துள்ளது. வயிறு நிறைய உண்பேன்" என்று கூறினாள். ஹனுமானோ- "இராமபிரானின் காரியத்தை நான் முதலில் முடித்தபின் என்னைச் சாப்பிடலாம். நான் மரணத்திற்குப் பயப்படவில்லை" என்று கூறினார். அவள் இக்கூற்றை மறுத்ததும், அவளது வாயைத் திறக்கச் சொன்னார். அவளது திறந்த வாயின் அளவுக்கு, ஹனுமானின் உருவம் இருமடங்கு வளர்ந்தது. அவள் நூறு யோஜனை தூரம் வாயைத் திறந்த போது ஹனுமான் சிறு உருவம் தாங்கி அவளது வாயில் நுழைந்து வெளியில் வந்தார். ஹனுமானின் அறிவுத்திறனைப் பார்த்த ஸுரஸா மிகவும் மகிழ்ந்து அவரது காரியம் வெற்றிபெற ஆசீர்வதித்து விடை கொடுத்தாள்.

ராகுவின் தாயார் 'ஸிம்ஹிகை' கடலில் வசித்து வந்தாள். மேலே பறந்து செல்பவைகளின் நிழலை அவள் பற்றினால், அந்த ஜீவன் தன்வசமிழந்து கடலில் விழும். இவ்வாறு அவள் பலரை அழித்து இருக்கிறாள். ஹனுமானிடமும் அவ்வாறு செய்யத் தொடங்கினாள். தனது வேகத்திற்கு தடை ஏற்பட்டதைப் பார்த்த ஹனுமானின் பார்வை கீழே செல்ல, அது ஓர் அரக்கியின் செயல் என உணர்ந்தார். ஹனுமானின் எதிரில் அவள் நிற்கமுடியுமா என்ன? சிறிய தட்டுதல் ஒன்றால் அவள் கதை முடிந்தது. ஹனுமான் இடையூறின்றி கடலின் மறுகரையை அடைந்தார். அங்கு ஓர் அழகிய வனத்தைப் பார்த்தார். பசுமையான மரங்கள், நறுமணத்துடன் கூடிய மலர்கள், பறவைகளின் இனிமையான

சப்தங்கள், வண்டுகளின் ரீங்காரம் இவையாவும் ஹனுமானின் மனதை தன் பக்கம் இழுக்க முயன்றன. ஆனால் ஹனுமான் அப்பக்கம் திரும்பவேயில்லை. அவர் தாவியபடி மலையின் உயரமான உச்சியில் ஏறினார். அந்த இடம் கூடாரம் அமைக்க உகந்தது என அவர் தீர்மானித்தார். வானரங்களுக்கு இந்த பழம், கிழங்குகள் போதுமானது. இனிமையான நீரும் உள்ளது. எல்லாவற்றிற்கும் மேலாக இங்கிருந்து இலங்கை முழுவதையும் பார்க்க முடியும். அங்கிருந்தபடியே ஹனுமான் இலங்கையின் பல விபரங்களை அறிந்து கொண்டார். இலங்கையின் அகழிகள் கடத்தற்கரியன என்பதை அனுமானித்து, அவை பற்றிய விபரங்களை நுணுக்கமாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என நிச்சயித்தார். ஸீதையைத் தேடுவதோடன்றியும், இதுவும் தன் கடமையென்று தீர்மானித்தார்.

இவ்வளவு பெரிய உருவத்துடன் இலங்கையில் நுழைந்து ஒவ்வொரு விஷயத்தையும் கவனமாய் பார்ப்பது முடியாது என்பதால் மகாவீரனான ஹனுமான் 'அணிமா' என்ற ஸித்தியால் தனது உருவத்தை மிகவும் சிறியதாக ஆக்கிக் கொண்டு பகவத் ஸ்மரணையுடன் இலங்கையின் வாயிலை அடைந்தார். அந்திவேளையில் ஒளிந்தபடி உள்ளே நுழையும் இவரைப் பார்த்து இலங்கையின் அதிஷ்டான தேவதையான லங்கிணிக்கு சந்தேகம் உண்டாயிற்று. அவள் ஹனுமானிடம் நெருங்கி- "டேய்! நீ திருட வந்தாயா?" என்று அதட்டினாள். ஹனுமான் ஒரு சிறு குத்துவிட்டு அவளை ரத்தம் சிந்தி பூமியில்

விழும்படி செய்தார். தன்னை சமாளித்துக் கொண்டு அவள்- "போ, உன்னை அறிந்து கொண்டேன். எப்பொழுது ஒரு வானரனின் அடியால் உனக்கு இந்நிலை வருமோ அப்பொழுது ராவணனுக்கு முடிவு வந்ததாகத் தெரிந்து கொள் என முன்பே பிரம்மா என்னிடம் கூறியுள்ளார்" என கூறினாள். ஹனுமான் இலங்கையில் நுழைந்தார். அவர் இலங்கையில் நுழைந்து அரக்கர்களின் அன்னசாலை, பள்ளியறை, விளையாட்டு மைதானம் முதலிய இடங்களைப் பார்த்தார். ஆயுத சாலை, ஆலோசனை மண்டபம், ராணுவக் கூடாரம் முதலியவற்றையும் பார்த்தார். ஸீதையைத் தேடுவதற்காக அவர் ராக்ஷஸ ராஜன் ராவணனின் அந்தப்புரத்தையும் அலசினார். மண்டோதரி முதலிய பெண்களைப் பார்த்தாரே தவிர, ஸீதையைப் பற்றி எதுவும் தெரியவில்லை. அதனால் கவலையடைந்தார். மனச்சோர்வு உண்டாயிற்று. "நான் தர்மநெறியை எங்கும் மீறியதில்லை. மாற்றான் பெண்களைப் பார்ப்பது அதர்மமன்றோ. இதுவரை ஒருபொழுதும் நான் இந்த பாபத்தை செய்ததில்லை. இன்று பெரிய தவறிழைத்துவிட்டேன்" என நினைத்து வருந்தினார். அடுத்த கணமே அவர் உள்ளத்தில் மற்றோர் எண்ணம் எழுந்தது. பகவானின் ஸ்மரணையால் அவர் உள்ளம் தெளிவடைந்தது. ஒரு தீர்மானம் உண்டாயிற்று. "நான் மாற்றான் பெண்களைப் பார்க்க வேண்டிய அவசியம் நேர்ந்தது. ஆனால் நான் தவறான நோக்குடன் பார்க்கவில்லை. தேவை ஏற்பட்டதால்

பார்த்தேனே தவிர என் மனதில் சிறிதும் மாற்றம் இல்லை. புலன்களின் நேர்மையான செயலுக்கோ, தவறான செயலுக்கோ மனமே காரணம். என் மனமோ ஒழுங்காக இருக்கிறது. ஸீதையை வேறு எங்கு தான் தேடுவேன்? பெண்களைப் பெண்கள் இருக்குமிடத்தில்தான் தேடவேண்டுமே தவிர, மான்கள் கூட்டத்தில் தேட முடியாது. தூய மனதுடன் நான் தேடியிருப்பதால் என்னிடம் எக்குற்றமுமில்லை" என்று நிச்சயித்துக் கொண்டு மேலும் தேட முயற்சித்தார். மேலே சென்றபோது ஒரு சிறு குடில் தென்பட்டது. அந்த குடிலின் உட்புறம் எங்கும் "ராம, ராம" என்று எழுதப் பட்டிருந்தது. அது மணிகளின் ஒளியால் இரவிலும் நன்கு தெரிந்தது. சின்னச் சின்னப் பாத்திகளில் துளசிச்செடிகள் பூத்து நறுமணத்தைப் பரப்பிக் கொண்டிருந்தன. அக்குடிலுக்கு எதிரில் ஒரு சிறிய பகவானின் ஆலயம் இருந்தது. அதில் பகவானின் ஆயுதங்களின் படங்கள் வரையப்பட்டிருந்தன. இலங்கையில் இத்தகைய இடமா! என்று ஹனுமானுக்கு ஆச்சரியமும், ஆனந்தமும் உண்டாயிற்று.

விடியற்காலை வேளை. விபீஷணன் விழித்து ராம நாமம் சொல்லத் தொடங்கினார். இது யாரோ ஸாது என ஹனுமானுக்கு நிச்சயம் ஏற்பட்டது. அவருடன் அறிமுகப்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தார். ஹனுமான் அந்தண வடிவம் தாங்கி "ராம, ராம" எனக் குரல் கொடுத்தார். விபீஷணன் அவசரமாய் வெளியில் வந்தார். இரண்டு பகவத் பக்தர்களும் ஒருவரையொருவர் மார்போடு தழுவிக்

கொண்டனர். இருவரின் உள்ளமும், பிரேமையாலும், ஆனந்தத்தாலும் நிரம்பியிருந்தது. ஹனுமானுக்கு விபீஷணனின் உள்ளத்தில் சாட்சாத் பகவான் தெரிந்தார். விபீஷணனோ ஹனுமானையே சாட்சாத் பகவானாய் நினைத்தார். பரஸ்பர அறிமுகம் ஆயிற்று. ஹனுமான் தன்னைப் பற்றி என்ன பேசப் போகிறார்? அவர் தயாளுவான தன் பிரபுவின் சரித்திரத்தையும், பிராட்டி கவர்ந்து செல்லப்பட்டதையும் தெரிவித்துத் தான் வந்த காரணத்தையும் கூறினார். விபீஷணன்- "அன்புள்ள ஆஞ்ஜனேயா! பற்களுக்கு இடையில் நாக்கு இருப்பதுபோல் நான் இங்கு எச்சரிக்கையுடன் கஷ்டப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறேன். பிரபு இந்த அனாதையை எப்போது தன்னுடையவனாய் ஆக்கிக் கொள்ளப் போகிறார்? நான் தமோ குணம் நிறைந்த குலத்தைச் சேர்ந்தவன். என்னிடம் ஸாதனம் எதுவும் கிடையாது. பகவத் சரணத்தில் பிரேமையும் இல்லை. பகவான் என்னைத் தன்னிடம் சேர்த்துக் கொள்ள வேண்டும் என நான் எப்படி ஆசைப்பட முடியும்? இப்பொழுது உம்மைப் பார்த்து என் மனக்கவலை அகன்றது. ஏனெனில் பகவத் கிருபை இல்லாமல் அவரது கருணைக்கு இலக்கான ஸாதுக்களின் தரிசனம் கிடைக்காது. பகவானின் கருணையால் தாங்கள் என் குடிசைக்கு வந்து எனக்கு தரிசனமளித்தீர்கள். ஸாதுக்களின் தரிசனம் பகவானிடம் சேர்த்து வைக்கும் என்பது நிச்சயம்" என்று கூறினான். ஹனுமான்- "விபீஷணா! பகவான் மிகவும் தயையுள்ளவர். அவர் எப்பொழுதும் தீனஜனங்களிடம் கருணை செய்து வருகிறார். நீ

உம்மைப் பற்றிச் சொன்னாய். சரி. நான் எந்தக் குலத்தைச் சேர்ந்தவன்? வானரன், சஞ்சலமானவன், ஸாதனையற்றவன். எங்களால் மற்றவர்களுக்கு நன்மையில்லை. காலையில் ஒருவன் எங்கள் பெயரைச் சொன்னால் அவனுக்கு அன்று முழுவதும் சாப்பாடு கிடைக்காது. நண்பா! விபீஷணா!! நான் இவ்வளவு தாழ்ந்தவனாயினும் என்னிடத்தில் பகவான் கருணை செய்கிறார். இத்தகைய பிரபுவைத் தெரிந்து கொண்டும் பக்தி செய்யாமல் சம்சாரத்தில் உழலுபவன் ஏன் துன்பப்பட மாட்டான்?" என்றார்.* பகவானின் குணங்களை நினைத்து நினைத்து ஹனுமானின் உள்ளம் உருகியது. அவரது கண்கள் ஆனந்தக் கண்ணீரால் நிரம்பின. இருவரும் வெகுநேரம் உரையாடினர். விபீஷணன் சொல்ல ஹனுமான் அசோகவனத்திற்குச் சென்றார்.

தாயாரான ஸீதை அசோகவனத்தில் அமர்ந்திருந்தாள். அவளது உடல் மெலிந்திருந்தது. கேசங்கள் ஜடையாக பின்னியிருந்தன. ஸௌபாக்கியத்தின் அடையாளமாய் தலையில் பின்னல் மட்டும் இருந்தது. அவள் இடைவிடாமல் பகவானின் நாமத்தை ஜபித்து, மனதால் பகவானின் குணங்களை நினைத்தபடி இருந்தாள்.

---

* த்ருணாதபி ஸுநீசேத தரோரிவ ஸஹிஷ்ணுநா ।
அமாநிநா மாநதேந கீர்தநீய: ஸதா ஹரி: ॥
\- ஸ்ரீக்ருஷ்ணசைதன்ய மஹாப்ரபு

"புல்லினும் தாழ்ந்தவன் என்ற தாழ்மை உணர்வு, மரத்தைப் போன்ற பொறுமை, தனக்கு மரியாதையை எதிர் பார்க்காமல் மரியாதையளித்தல் இவற்றுடன் எப்பொழுதும் ஸ்ரீஹரியைக் கீர்த்தனம் செய்ய வேண்டும்."

************************************************************

தூரத்தில் இருந்தபடியே மனதால் வணங்கிய ஹனுமான் ஒரு மரத்தின் மேல் ஏறி அமர்ந்தார். ராவணன் வந்தான். ஸீதையிடம் இனிமையாகப் பேசித் தன்வசப்படுத்தப் பார்த்தான். பிறகு அதட்டினான். ஆனால் ஸீதையின் உறுதி, தூய்மை, ராமநிஷ்டை, கற்பு இவற்றின் ப்ரபாவத்தினால் தோல்வியுற்றுத் திரும்பினான். பல அரக்கியர் ஸீதையை ராவணனுக்கு உடன்பட வைக்கும் நோக்கத்தில் அறிவுரை கூறினர். இதனால் ஸீதைக்கு பெரும் துயரம் உண்டாயிற்று. இராமபிரானைப் பற்றிய செய்தி எதுவும் தெரியாததால், அவர் உயிருடன் இல்லையோ என்றுகூட சந்தேகம் எழும்பியது. திரிஜடை தான் கனவில் கண்ட காட்சிகளைக் கூறிப் பிராட்டிக்கு ஆறுதல் அளித்தாள். அரக்கியர் பலரும் அங்கிருந்து அகன்றனர். சிறிது நேரத்தில் திரிஜடையும் அகன்றாள்.

ஸீதையின் மிகுந்த துயரத்தைக் கண்ட ஹனுமான் இராமபிரானின் அவதாரத்திலிருந்து தொடங்கி திருக்கல்யாணம், காட்டுக்கு வந்தது, ஸீதையின் அபஹரணம் முதலிய விஷயங்களை மரத்தின் மேல் இருந்தபடியே சொல்லி கடைசியில் இராமபிரான் அனுப்பியதால் தான் இங்கு வந்திருப்பதாய்த் தெரிவித்தார். ஹனுமானின் அமுதம் போன்ற வார்த்தையைக் கேட்ட ஸீதைக்கு பெரும் மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆனால் அடுத்த கணமே ஒரு சந்தேகத்தால் அவள் உள்ளம் நடுங்கியது. "இதுவும் அரக்கர்களின் மாயையாக ஏன் இருக்கலாகாது?" என அவள் நினைத்தாள். ஹனுமான் ஸீதையின் எண்ணத்தை ஊகித்தார். "அம்மா! நான் ராம சேவகன் என்று அந்த கருணையின் இருப்பிடமான இராமபிரானின்

சரணங்களில் சபதம் செய்து சொல்கிறேன். தங்களுக்கு நம்பிக்கை ஏற்படவேண்டி இராமபிரான் என்னிடம் ஓர் அந்தரங்கமான கதை சொல்லியிருக்கிறார். தாங்கள் காட்டில் அவருடன் தனித்திருந்தபொழுது ஜயந்தன் காக்கையின் உருவம் தாங்கி தங்களிடம் தவறிழைக்க, இராமபிரான் அவன்மேல் இஷீகாஸ்த்ரத்தை [இஷீகம்-புல்] பிரயோகித்தார். அவனுக்கு மூவுலகிலும் எங்குமே புகலிடம் கிடைக்கவில்லை. மேலும் தாங்கள் படகோட்டிக்காகக் கொடுத்த மோதிரத்தை இராமபிரான் தன் விரலில் அணிந்து கொண்டாரே. தங்களுக்கு என்னிடம் நம்பிக்கை ஏற்படுவதற்காக அந்த மோதிரத்தை என்னிடம் கொடுத்துள்ளார். தங்கள் சரணங்களை வணங்குகிறேன். தாங்கள் என்னை நம்புங்கள்."

ஹனுமானின் உள்ளம் உண்மையில் சலனமற்றுத் தூயதாய் இருந்ததாலும், அவர் உண்மையான பிரமாணங்களைக் கூறியதாலும், ஸீதைக்கு நம்பிக்கை ஏற்பட்டது. அவள் ஹனுமானை கீழே அழைத்து, மோதிரத்தைப் பெற்றுக் கொண்டு ஆனந்தத்தில் மூழ்கினாள். பகவானின் தூதுச்செய்தியைக் கேட்டு பிராணபிரியனான பகவானையே அடைந்ததுபோல் மகிழ்ந்தாள். அவள்- "ஹனுமானே! இன்று நீ எனக்குப் பேருதவி செய்தாய். இராமபிரான் என்னை மறந்துவிட்டாரோ அல்லது அவருக்கு ஏதேனும் தீங்கு நேர்ந்துவிட்டதோ என நினைத்து நான் இறந்திருப்பேனேயானால் இதைக் கேட்டு அவருக்கு எத்தகைய கஷ்டம் நேரிடும். என் விஷயமாய் அவர் கஷ்டப்படுகிறார். அவர் என்னை எப்பொழுதாவது நினைக்கிறாரா? நான் அவரை எப்பொழுது பார்ப்பேன்? அவர் விரைவில்

என்னை மீட்பாரா?" என்று ஹனுமானிடம் கேட்டாள். பேசும் பொழுதே ஸீதையின் தொண்டை அடைத்து, கண்ணீர் பெருகி பேச முடியாமல் ஆனாள். ஹனுமான் சொன்னார்- "தாயே! தாங்கள் ஏன் இவ்வளவு துயரப்படுகிறீர் கள்? தங்களுக்காக இராமபிரான் படும் துயரத்தை நான் வர்ணிக்க இயலுமா? அவர் பூமியைப் பார்த்தால்- 'பூமித்தாயே! உன் அன்பு மகளுக்கு என்னால் பெரும் கஷ்டம் ஏற்பட்டதால் நீ கோப மடைந்து என்னை உன்னிடத்தில் ஐக்கியமாக இடம் கொடுக்க மறுக்கின்றாயோ' என்கிறார். மலர்ந்த புஷ்பங்களையோ, மொட்டுக்களையோ பார்த்தால் லக்ஷ்மணனிடம்- 'லக்ஷ்மணா! இதைப் பறித்து வா. நான் ஸீதையின் கேசத்தில் சூட்டுகிறேன்' என்கிறார். தாயே! அவரின் பிரிவுத் துயரை வார்த்தையால் சொல்ல முடியாது. தங்களையே எப்போதும் நினைத்து அவர் தன்னையே மறந்து விடுகிறார்."

ஹனுமான் மேலும் சொன்னார்- "தாயே! அவர் தங்களைக் குறித்து சொன்னதாவது- 'ப்ரியே! உன்னுடன் சேர்ந்து இருந்தபொழுது எனக்கு சுகத்தை அளித்த பொருட்கள் இன்று எனக்குத் துன்பத்தைத் தருகின்றன. அழகான மரங்களின் இளந்தளிர்கள் எனக்கு நெருப்பைப்போல் காணப் படுகின்றன. சந்திரன் கோடைகாலக் கதிரவன் போல் காய்கிறான். முன்பு அமுதத்திற்கு நிகராக இருந்த மேகத்தின் சிறுசிறு துளிகள் இன்று எரியக் கூடிய எண்ணெயைப்போல் இருக்கின்றன. குளிர்ந்த, நறுமணமிக்க இளந்தென்றல் கொடிய அரவத்தின் பெருமூச்சுக்கு சமமாய் என்னைத் துன்புறுத்துகின்றது. எனது மனவேதனையை, ஆத்திரத்தை யாரிடத்திலாவது வெளிப்படுத்தினால்

என் மனச்சுமை குறைந்து எனது உள்ளம் தெளிவடையும். ஆனால் யாரிடம் சொல்வேன்? என்ன சொல்வேன்? நம் இருவரின் ஒன்று கலந்த அன்பும், ஒருவர் மற்றவர் ஆன்மாவுடன் கலந்திருக்கும் நிலையையும் யார் அறிவர்? எனது உள்ளமும், ஆன்மாவும் எப்பொழுதும் உன்னிடத்திலேயே இருக்கின்றன. ஒரு கணமும் உன்னைவிட்டுப் பிரியவில்லை.* நீ தனியாக இல்லை. இதனால் நம் சொல்லொணாத பிரேமையை விளக்கிவிட முடியுமா? ஸீதைக்கும், எனக்கும் உள்ள அன்பு சொல்லி மாளாது.'"

இதைச் சொல்லும்பொழுது ஹனுமான் பாவத்தில் மூழ்கிவிட்டார். இராமபிரானே தன் எதிரில் நின்று பேசிக் கொண்டிருப்பதாய் ஸீதை உணர்ந்தாள். பிரேமையில் ஆழ்ந்து உடல் உணர்வை மறந்தாள். ஹனுமான் அவளை தைரியப்படுத்தியவாறே- "தாயே! பகவானின் ப்ரபாவம், ஈச்வரத்தன்மை, பலம் முதலியவற்றைப் பாருங்கள். அவர் பாணங்களின் எதிரில் ஒரு கணம்கூட அற்பர்களான இந்த அரக்கர்கள் நிற்க முடியாது. இவர்கள் அழிந்ததாய் உணருங்கள். இதுவரை தாங்கள் இருக்குமிடம் தெரியாமல் இருந்தது. இல்லையெனில் எப்பொழுதோ அரக்கர் களின் அழிவு ஏற்பட்டிருக்கும். வானரர்கள், கரடிகளாகிய நாங்கள் அனைவரும் அவருடன்

---

* तत्व प्रेम कर मम अरु तोरा। जानत प्रिया एकु मनु मोरा॥
सो मनु सदा रहत तोहि पाहीं। ................................ ॥

ஹே ப்ரியே! எனக்கும், உனக்கும் உள்ள பிரேம தத்துவ ரகசியத்தை என் மனம் மட்டுமே அறியும். அந்த மனம் எப்பொழுதும் உன்னுடனேயே உள்ளது.

*****************************************************************

வந்து அரக்கர்களை அழித்து, தங்களை அழைத்துக் கொண்டு அயோத்தி செல்வோம்" என்று கூறினார்.

மேலும்- "தாயே! தங்களுக்கு ராமசந்திர பிரபுவின் மகிமை மறந்துவிட்டதா என்ன? அவர் படையுடன் கிளம்பி, சமுத்திரத்தை ஸ்தம்பிக்கச் செய்து, இலங்கையில் ஒரு அரக்கன் கூட உயிர் தப்பாமல் அழிப்பார். தேவர்களோ, தானவர் களோ, ம்ருத்யு தேவதையோ இராமபிரானது வழியில் இடையூறு ஏற்படுத்தினால் அவர்களையும் அழிப்பார். தாயே! நான் சபதமிட்டுக் கூறுகிறேன். உமது பிரிவால் இராமபிரான் படும் துயரம் வர்ணிக்க இயலாது. அவர் ஒரு கணமும் தாமதிக்க மாட்டார். தாங்கள் அவரை விரைவிலேயே நலத்துடன் விளங்கக் காண்பீர்கள்" என்றார். ஸீதை கூறினாள்- "ஆஞ்ஜனேயா! இதுவரை பத்து மாதங்கள் கழிந்துவிட்டன. இன்னும் இரண்டு மாதங்களே மீதம் உள்ளன. இதற்கிடையில் அவர் என்னை ரக்ஷிக்கவில்லையென்றால் நான் அவரைக் காணவே முடியாது. அவரைக் காண்பேன் எனும் ஆசையில்தான் வாழ்ந்து கொண்டிருக்கின்றேன். விபீஷணன் சமாதானம் செய்திருக்காவிடில் இதற்குள் ராவணன் என்னைக் கொன்றிருப்பான்." இதை ஹனுமானிடம் சொல்லிச் சொல்லி ஸீதை கலங்கிப் போனாள். அவளது குரல் கம்மியது. அவளால் பேச இயலவில்லை.

ஹனுமான் தொடர்ந்தார்- "தாயே! என்னிடமிருந்து விஷயம் தெரிந்தவுடனேயே பகவான் வருவார் என்று சொன்னேன். ஆனால் அவர் வரவேண்டிய அவசியம் தான் என்ன? நான் இன்றே தங்களை இத்துயரத்திலிருந்து

விடுவிப்பேன். தாங்கள் என் முதுகின் மேல் அமருங்கள். தங்களைத் தூக்கிக் கொண்டு கடலைத் தாண்டுவேன். ஹோமம் செய்த ஹவிஸை அக்கணமே இந்த்ரனிடம் அக்னி கொண்டு சேர்ப்பது போல் தங்களை இக்கணமே பிரவர்ஷண மலை மேல் இருக்கும் இராமபிரானிடத்தில் கொண்டு சேர்க்கிறேன். தங்களை மட்டுமல்லாமல் ராவணன் உள்ளிட்ட இலங்கையையே இராமபிரானின் அருளால் பெயர்த்து எடுத்துச் செல்வேன். தாமதிக்காதீர்கள். தங்களை எடுத்துச் செல்லும்போது எந்த ஒரு அரக்கனும் என்னைப் பின் தொடர முடியாது." ஹனுமானின் வார்த்தையைக் கேட்ட ஸீதை மிகவும் மகிழ்ந்து- "அஞ்ஜனையின் செல்வா! உனது உருவம் மிகவும் சிறியது. நீ என்னை எப்படி தூக்கிச் செல்ல முடியும்?" என வினவினாள். ஹனுமான் ஸீதைக்கு தனது பயங்கரமான விஸ்வரூபத்தை காண்பித்தார். வளர்ந்து மேருமலையைப்போல் நிற்கும் அவர்- "தேவி! தற்பொழுது தாமதிக்காதீர்கள். அரக்கர் களுடன் சேர்த்து இலங்கையை தூக்கிச் செல்லட்டுமா அல்லது அரக்கர்களை அழித்து விட்டு இலங்கையை மட்டும் தூக்கிச் செல்லட்டுமா என்று கூறுங்கள். தாங்கள் வந்து இராமபிரானை யும் சுகப்படுத்துங்கள்" என்று கூற ஸீதை பகர்ந்தாள்- "வாயுகுமார! உனது சக்தி, வலிமை எனக்குத் தெரியும். நீ அக்னிக்கும், வாயுவிற்கும் நிகரான வலிமையுடையவன். நீ என்னைத் தூக்கிச் செல்லும் சக்தியுடையவன். ஆனால் உன்னுடன் நான் வருவது சரியில்லை. உனது கடுமையான வேகத்தால் நான் மூர்ச்சையடைந்துவிடுவேன். உன் மேலிருந்து விழுந்து விடுவேன். அரக்கர்களுடன் நீ பெரும்போர் நிகழ்த்த வேண்டி வரும். என்னைத்

தோளில் சுமந்து செல்லும் நீ பல ஆபத்துகளை எதிர்கொள்ள வேண்டிவரும். யுத்த விஷயமான தால் நீ வெற்றி பெறுவாயா அல்லது அவர்கள் வெல்வார்களா எனச் சொல்ல முடியாது. நீயே வெற்றி பெறலாம். ஆனால், அதனால் இராமபிரானின் புகழ் பெருகாது. நான் இவ்வாறு வந்தால் 'ஹனுமான் யாரையோ தூக்கிச் செல்கிறார்' என உலகம் நினைக்கும். ஒரு கணமானாலும் நம் நெறியில் சந்தேகம்தான் உண்டாகும். மேலும் கற்புநெறியின்படியும் தன்னிஷ்டப்படி நான் உன் மேனியைத் தொடுவதும் சரியில்லை. ராவணன் என்னைத் தூக்கி வந்தானேயென்றால் தன்வசமிழந்த, சக்தியற்றவளான நான் என்ன செய்யமுடியும்?* இராமபிரான் இங்கு வந்து அரக்கர்களுடன் ராவணனை அழித்தபின் நான் அவரோடு

---

* भर्तुर्भक्तिं पुरस्कृत्य रामादन्यस्य वानर।
नाहं स्प्रष्टुं स्वतो गात्रमिच्छेयं वानरोत्तम॥
यदहं गात्रसंस्पर्शं रावणस्य गता बलात्।
अनीशा किं करिष्यामि विनाथा विवशा सती॥
(வா॰ரா॰ ௫ ।௩௭ ।௬௨-௬௩)

எல்லையற்ற பராக்கிரமம் உடைய பகவான் ஸ்ரீராமனே போற்றி! மிகுந்த பலசாலியான லக்ஷ்மணனே போற்றி! இராமபிரானால் ரக்ஷிக்கப்பட்ட ஸுக்ரீவனே போற்றி! அனாயாஸமாக மிகுந்த பராக்கிரமங்களைச் செய்யும் கோசலத்தின் மன்னனான ஸ்ரீராமசந்திரரின் தாஸன் ஆவேன். நான் ஹனுமான் என்ற பெயர் கொண்டவன். நான் வாயு புத்திரனும், பகைவர்களின் படையை அழிப்பவனும் ஆவேன். ஆயிரக்கணக்கான மரங்களையும், மலைகளையும் கொண்டு பகைவர்களை தாக்கும்பொழுது ஆயிரக்கணக்கான ராவணர்கள் ஒன்று சேர்ந்தாலும்கூட என் பலத்திற்கும், வீரத்திற்கும் ஈடு இணையாகாது. நான் இலங்கையை சின்னாபின்னப்படுத்திவிடுவேன். மிதிலை குமாரி ஸீதாபிராட்டியை நான் வணங்கி, மற்ற அரக்கர்கள் பார்த்துக் கொண்டு இருக்கும் பொழுதே ஸ்ரீராம காரியத்தை வெற்றியுடன் செய்து முடிப்பேன்.

செல்வதே அவருக்கும் பொருத்தம்." ஸீதையின் வார்த்தைகளை ஹனுமான் கொண்டாடினார். ஸீதை- "குழந்தாய்! உனது பக்தி, பகவானின் மீதுள்ள விசுவாசம், வலிமை, ஆண்மை இவற்றைப் பார்த்து எனக்குப் பெருமகிழ்ச்சி உண்டாகிறது. நீ பெருவலிமை பெற்றவனாக, நன்னடத்தை உடையவனாக, மூப்பு-மரணமற்ற வனாக, நற்குணங்கள் நிரம்பியவனாகத் திகழ்வாய். மேலும் இராமபிரான் உன்னிடம் அளவு கடந்த அன்பு கொண்டிருப்பார்" என ஆசீர்வதித்தாள்.

"இராமபிரான் அளவு கடந்த அன்பு கொண்டிருப்பார்" என்பதைக் கேட்ட ஹனுமான் மெய்சிலிர்த்தெழுந்தார். இதற்கு மேலாக அவருக்கு என்ன வேண்டும்? வாழ்க்கையின் பெரும் லாபம் இதுதானே. தாயாரின் ஆசீர்வாதத்தை எல்லை யற்றதாய் ஏற்றுத் தன்னை க்ருதக்ருத்யனாய் [செய்யவேண்டியதைச் செய்து முடித்தவனாய்] நினைத்தார்.

ஸீதா மாதாவின் தரிசனத்திற்குப்பின் ஹனுமான் ஆலோசித்தார்- "இப்பொழுது ராவணனுடன் யுத்தம் என்பது தீர்மானிக்கப்பட்டு விட்டது. ஆனால் இந்தக் கோட்டை மிகவும் வலுவாக உள்ளது. நாற்பக்கச்சுவர்களும் நன்கு காக்கப்படுகின்றன. வாயில்களில் கடத்தற்கரிய பெரிய இயந்திரங்கள் பொருத்தப்பட்டுள்ளன. இதை சாதாரணமாய் வெல்ல இயலாது. இதை உடைக்காமல் உள்ளே நுழையவும் முடியாது. இதை உடைத்தெறிவது எப்படி? இந்த கேள்வி இருக்கட்டும். நான் வானரன் அல்லவா. இராமபிரானின் காரியம் முடிந்துவிட்டதால் சிறிது பழங்களைப் பறித்துச் சாப்பிடுகிறேன். மரக்கிளை

களை முறித்தெறிவேன். இக்கயவர்களைக் கவர்ந்திழுக்க இதுதான் வழி" என்று நிச்சயித்தார். இவரது அறிவு, வலிமை இவற்றை உணர்ந்த பிராட்டியும் அனுமதி கொடுத்தாள்.

அசோகவனத்தின் பல மரங்கள் அழிந்தன. காவலர்கள் ஓடினர். ஆயிரக்கணக்கான அரக்கர்கள் மண்ணைக் கவ்வினர். ஒரே சுழற்றலில் அக்ஷகுமாரனின் எலும்புகள் நொறுங்கின. இலங்கை முழுவதும் கொந்தளிப்பு பரவியது. ராவணன் போருக்கு புறப்பட, மேகநாதன் தடுத்தான். மேகநாதன் போரிட வந்து, ஹனுமானின் அடியால் பிராணஸங்கடம் அடைந்தான். உடனேயே, பயத்தால் அவன் பிரம்மாஸ்த்ரத்தை விடுவித்தான். பிரம்மா அளித்த வரத்தால் பிரம்மபாசத்தில் கட்டுப்படாவிட்டாலும், பிரம்மபாசத்தை கௌரவிக்க வேண்டுமென்பதாலும், ராவணனின் சபைக்கு சென்று, பகவானின் மகிமையைக் கூறி அரக்கர்களை அச்சுறுத்த வேண்டுமென்பதாலும் பிரம்மபாசத்தில் தானே கட்டுண்டார்.

மிகவும் மகிழ்ச்சியுடன் மேகநாதன் [இந்த்ரஜித்] ஹனுமானை சபைக்கு இழுத்துச் சென்றான். அங்கு செல்லும்போதே பாசத்தின் கட்டு விடுபட்டது. ராவணனின் சபையில் தேவர்கள், லோகபாலகர்கள், திக்பாலகர்கள் கைகுவித்து நிற்பதைக் கண்டார். அங்கு கதிரவனின் ஒளி மங்கியிருந்தது. வாயு விசிறிக் கொண்டிருந்தார். அக்னி ராவணனின் உத்தரவை எதிர்பார்த்து இருந்தார். அனைவரும் ராவணனின் முகக்குறிப்பை எதிர்பார்த்து இருந்தனர். ஹனுமான் கவலையற்று நின்று கொண்டிருந்தார். இவரது

****************************************************************

துணிவைப் பார்த்து ராவணன் என்ன நினைத்தானோ, உரக்கச் சிரித்தான். அடுத்த கணமே தன் மகன் அக்ஷகுமாரனின் நினைவு வந்தது. அதட்டியபடி கேட்டான்- "நீ யார்? யாருடைய வலிமையால் இத்தகைய அட்டூழியம் செய்தாய்? நான் யார் தெரியுமா? இப்போது உனக்கு உணர்த்துகிறேன்." ஹனுமான் கம்பீரமான குரலில் பதில் உரைத்தார்- "ராவணா! பிரக்ருதி முழுவதற்கும் ஆசிரயமானவனும், ரோமகூபம் தோறும் கணந்தோறும் பிரும்மாண்டங்களைப் படைத்து அழிப்பவனும், பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் முதலானவர்களுக்கும் செயல்புரிய சக்தியளிப்பவனும், உன்னைப் போன்ற அரக்கர்களை அழிக்கவே அவதரித்தவனுமான இராமபிரானுடைய தூதன் நான். அந்த பிரபுவின் கருணாவேசத்தால்தான் ஆதிசேஷனே பூமியைத் தாங்குகிறான். அவரை நீ தெரிந்து கொள்ள வில்லையா? ஜனகனுடைய யக்ஞ சமயத்தில் நீ அசைக்கக்கூட முடியாத வில்லை அவர் புல் போல் முறித்ததை மறந்துவிட்டாயா? கரன், தூஷணன், த்ரிசிரஸ் இவர்களின் பதினான்காயிரம் அரக்கர்களின் சேனையை தனியாக அவர் அழித்தது நினைவில்லையா? உன்னை அக்குளில் இடுக்கிக் கொண்டு சென்ற வாலியை ஒரே பாணத்தால் அடித்த அவரை நீ புரிந்து கொள்ள வில்லையா? ராவணா! நீ அவரை மறந்துவிட்டாய். ஆனால் அவர் உன்னை மறக்கவில்லை. அவர் அருகில் இல்லாதபொழுது வேஷம் மாற்றிக் கொண்டு, வஞ்சனையால் அவரது தர்மபத்தினியை கவர்ந்து வந்த நீ அவரை மறந்தாலும், அவரிடமிருந்து நீ தப்ப முடியாது. நான்

அவருடைய தூதன். என்னை நன்கு தெரிந்து கொள். அவரது பாணங்களால் விரைவிலேயே இலங்கை பாழாகும். உன்னைச் சார்ந்தவர்களின் பெயர்கள்கூட மிஞ்சாது."

ஹனுமானின் துணிவான வார்த்தையைக் கேட்ட அரக்கர்கள் அனைவரும் நடுங்கினர். துணிவுடன் இராமபிரானை யுத்தத்தில் எப்படி எதிர்கொள்வது என்று மனதில் அச்சம் கொண்டனர். தேவர்கள் உள்ளம் மகிழ்ந்தனர். ராவணன் ஹனுமானின் வார்த்தையை அலட்சியப் படுத்திவிட்டான். ஹனுமான் மேலும் தொடர்ந்தார்- "பசி எடுத்ததால் நான் பழங்கள் அருந்தியதில் தவறேதும் இல்லை. இலைகளைப் பறிப்பதும், கிளைகளை ஒடிப்பதும் எனது இயற்கை. என்னை தற்காப்புக்காக என்னைத் தாக்க வந்தவர்களை அடித்தேன். என்னைச் சிறைப்படுத்த முயற்சித்த உன் மகனின் செயல் அநியாயமானது. ஆனால் அதையும் மன்னித்தேன். எனது வார்த்தையை மதித்துக் கேள். பணிவுடனும், அன்புடனும் சொல்கிறேன். நல்ல உள்ளத்துடன் உனது நன்மைக்காகச் சொல்கிறேன். உடன்பிறப்பு போன்றவனே! எல்லா உலகையும் விழுங்கும் காலமும் அவரிடம் பயந்து அவருக்கு அடங்கி யிருக்கிறது. அப்படியிருக்கும்பொழுது அவரிடம் விரோதம் பூண்ட நீ தப்பிக்க முடியாது. ஸீதையைக் கொண்டு ஒப்படைத்துவிடு. பகவான் உன்னை மன்னிப்பார். பரமக்ருபாளுவான அவர் சரணாகதி அடைந்தவர்களின் குற்றங்களை மறந்து விடுவார். அவரது சரணங்களை ஸ்மரித்தபடி லங்காராஜ்யத்தை குறைவின்றி அனுபவிப்பாய். நீ உயர் குலத்தில் பிறந்தவன்; உன்னிடம் நிகரற்ற

செல்வங்கள் உள்ளது; நீ பெரிய அறிவாளி; போதிய வலிமையும் பெற்றவன்; இதனாலெல்லாம் கர்வம் கொண்டுவிடாதே. இவையனைத்தும் கானல்நீர் போன்றவை. சகோதரா! இப்பொழுதே நீ பகவானைச் சரணடை. இராமபிரானுக்கு எதிரியான உன்னை யாரும் காப்பாற்ற முடியாது என்று நான் சபதம் செய்து சொல்கிறேன். இது சத்தியம்."

मोहमूल बहु सूल प्रद त्यागहु तम अभिमान ।
भजहु राम रघुनायक कृपा सिंधु भगवान ॥

[ராமசரித மானஸம். ஸுந்தரகாண்டம். தோஹா: 23]

மோஹம் எதனுடைய மூலமோ, அவ்வாறே [அஞ்ஞானத்தால் உண்டான], மிகுந்த க்லேஷம் தரக்கூடிய இருள்மயமான கர்வத்தை விட்டுவிடு. ரகுகுல மணியும் கருணைக்கடலுமான பகவான் ஸ்ரீராமரை பஜனம் செய்.

ஹனுமான் மிகவும் இதமான வார்த்தைகள் பகன்றாலும், ராவணன் ஏற்றுக் கொள்ளவில்லை. அவன் கோபமடைந்து ஹனுமானைக் கொல்ல அரக்கர்களுக்கு உத்தரவிட்டான். தூதனைக் கொல்வது தவறு என விபீஷணன் எடுத்துரைக்க, கடைசியில் ஹனுமானது வாலைக் கொளுத்த உத்தரவிட்டான். *வாலில் துணி சுற்றி எண்ணெயில் நனைத்து நெருப்பு வைத்தனர். பத்து, இருபது அரக்கர்கள் அவரைப் பிடித்துக் கொண்டு நகரில் சுற்றினர். குழந்தைகள்

* ஸ்ரீஆஞ்ஜநேயரின் வாலை சாதாரணக் குரங்கின் வாலுடன் ஒப்பிடக்கூடாது. அது முடிவின்றி வளரும் தன்மையும், வலிமையும் கொண்டது. இக்காரணம் பற்றியே அதை "வாலதி" என்று கோஸ்வாமி துளஸிதாஸர் குறிப்பிடுவார். இப்புத்தகத்திலும் அவ்வாறே கையாளப்படுகிறது.

கைகொட்டிச் சிரித்தனர். இதுவே இலங்கையை அழிப்பதற்கு ஏற்ற நேரம் என ஹனுமான் எண்ணினார். வாலதியை ஒரு உதறு உதறினார். எல்லா அரக்கர்களும் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ஓடினர். அவர் தாவியபடியே ஒரு வீட்டிலிருந்து மற்றொரு வீட்டிற்கு சென்றபடி எல்லாவற்றையும் பொசுக்கினார். வாயுவும் உதவினார். அக்னியும் தனது நண்பன் வாயுவின் புத்திரன் விஷயத்தில் கைகோத்துக் கொண்டார். இலங்கை தகதகவெனப் பற்றி எரியத் தொடங்கி யது. மிகுதியான போர் யந்திரங்கள் அழிந்தன. ஹனுமான் தான் அவமதிக்கப்பட்ட இடத்தைச் சாம்பலாக்கிவிட்டார். அனைவரும் தத்தம் பொருட்கள், சிறுவர்கள், முதியவர்கள், பெண்டிர், குழந்தைகளைப் பிடித்தபடி ஓட, இலங்கை முழுவதும் 'ஹாஹாகாரம்' எழும்பியது. நாற்புறமும் தீப்பற்றி எரிந்தபொழுதிலும், பொன்மயமான இலங்கையின் பொலிவு மங்கவில்லை.

இலங்கையில் ஒரு இருட்டறையில் சனி பகவான் சிறைப்பட்டிருந்தார். அதன் மதில் சுவரில் ஹனுமான் கால் வைத்தபொழுது அது இடிந்து விழுந்தது. சனீச்வரன் ஹனுமானிடமிருந்து எல்லா விஷயங்களையும் அறிந்து கொண்டு, கடைக்கண்ணால் இலங்கையைப் பார்த்தார். விபீஷணனின் இல்லம் ஒன்றைத் தவிர இலங்கை முழுவதும் எரிந்து சாம்பல் குவியலானது. சனி தேவனும், "இலங்கையின் அழிவு நெருங்கிவிட்டது" எனக் கூறி, தன்னை விடுவித்த ஹனுமானுக்கு வரமளித்துச் சென்றார். ஹனுமான் கடலில் மூழ்கி ஸ்னானம் செய்து திரும்பவும் அன்னை

ஜானகியிடம் வந்தார். பிராட்டியும் தனது சூடாமணியை இராமபிரானுக்குக் கொடுத்து விரைவிலேயே தன்னைக் காப்பாற்ற வேண்டும் என்ற பிரார்த்தனையையும் சொன்னாள். ஸீதையை நமஸ்கரித்து கர்ஜனை செய்தபடியே ஹனுமான் கிளம்பினார். ஜாம்பவான், அங்கதன் முதலானோர் ஊணும், நீரும் துறந்து ஒற்றைக் காலில் நின்றபடி ஹனுமானை எதிர்நோக்கி இருந்தனர். அவரது மகிழ்ச்சியான ஆரவாரத்தைக் கேட்ட அனைவரும் காரியம் நிறைவேறியதை அனுமானித்து, அங்கு வந்து குதித்த ஹனுமானை மார்போடு அணைத்துக் கொண்டனர். கனிகளை உண்டும், நீர் அருந்தியும் மதுவனத்தைப் பாழாக்கிவிட்டு அனைவரும் இராமபிரானிடம் வந்தனர். ஹனுமான் உருக்கமான வார்த்தைகளால் பிராட்டியின் நிலையை வர்ணித்தார். இலங்கையின் செல்வம், ராவணனின் வலிமை, மற்றும் அங்குள்ள ஒவ்வொரு விஷயத்தையும் இராமபிரானிடம் சொன்னார். பகவான்- "வாயுகுமாரா! உன்னைப் போன்ற உபகாரி வேறு யாரும் கிடையாது. உனக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்? நான் உனக்கு கடனாளி. உனக்கு சமமாக என்னை ஒப்பிட்டு பார்க்க முடியவில்லை" என்று கூறினார். பகவானின் சொற்களைக் கேட்ட ஹனுமான் மனம் உருகி இராமபிரானின் திருவடிகளில் விழுந்தார். இராமபிரான் வலுவில் அவரைத் தூக்கி மார்புற அணைத்து கொண்டு, அவருக்கு அனன்யபக்தி நிலைத்திருக்க அருளினார். ஹனுமான் உருவில் வந்த சிவபெருமானின் ஆசை நிறைவேறியது.

* * * * *

( 3 )

தன்னை அண்டியவர்களை பகவானிடம் சேர்த்துவிடுவது ஹனுமானின் வாழ்க்கையில் உள்ள தனித்தன்மை. இலங்கையில் விபீஷணன் இவரை சந்தித்து, இவரது ஸங்கம், உரையாடல் இவற்றால் ராவணனுடைய சபையில் ஹனுமானின் பக்கம் பேசுவதற்கும், ராவணனை விட்டு இராமபிரானின் சரணத்தை அடைவதற்கும் துணிவு பெற்றார். ஸுக்ரீவன் தடுத்தும் இராமபிரான் சரணாகதனை ரக்ஷிப்பேன் எனத் தன் விரதத்தைக் கூறியபோது இவருக்கு ஏற்பட்ட ஆனந்தத்தை அளவிட்டுச் சொல்ல முடியுமா? மிகுந்த ஆர்வத்துடன் எல்லோருக்கும் முன்பாக அங்கதனுடன் விபீஷணன் அருகில் பாய்ந்து சென்று, அவரை இராமபிரானிடம் அழைத்து வந்தார். பகவானின் சேவை, பகவானை சரணமடைந்தவர்களுக்கு உதவுவது இது ஒன்றே அவரது காரியமாய் இருந்தது.

ஸேதுபந்தனத்தின் பொழுது ஹனுமான் கொண்டுவந்த மலைகளுக்கு கணக்கே கிடையாது. ஸேதுபந்தனம் முழுமை பெறும் சமயம் அவர் வடக்கு கோடியிலிருந்து ஒரு மலையைத் தூக்கி வந்து கொண்டிருந்தார். இந்த்ரப்ரஸ்தத்திற்கு சிறிது தூரத்தில் வரும்பொழுது ஸேதுபந்தனம் முடிந்து விட்டது என்ற விஷயம் அவருக்குத் தெரிய வந்தது. இந்த மலையைத் தூக்கிச் சென்று என்ன செய்யப் போகிறோம் என நினைத்து அங்கேயே வைத்தார். ஆனால் அந்த மலை சாதாரணமான மலையல்ல. உருவத்துடன் தோன்றிய அது ஹனுமானிடம் கூறியது- "பக்தசிரேஷ்ட! உமது

கரஸ்பர்சம் கிடைத்தும் பகவத் சேவை கிடைக்காமல் போக நான் என்ன தீங்கு செய்தேன். என்னை இங்கு விட்டுச் செல்லாதே. அங்கு எடுத்துச் சென்று ,ராமசரணத்தில் சேர்த்துவிடு. பூமியில் இடமில்லையானால் கடலில் தூக்கிப் போட்டுவிடு. பகவானின் கைங்கர்யம் கிடைத்தால் வாழ்க்கை சிறக்கும். இல்லாவிடில் வாழ்வதில்தான் என்ன பயன்?"

ஹனுமான் சொல்கிறார்- "மலையரசே! நீ உண்மையிலேயே மலையரசன்தான். உனது இத்தகைய த்ருடமான நிஷ்டையை பார்க்கும் பொழுது உன்னை எடுத்துச் செல்ல மனது துடிக்கிறது. ஆனால் காரியம் முடிந்துவிட்ட படியால் இனி எந்த மலையையும் கொண்டு வரவேண்டாம் என்பது இராமபிரானின் ஆணை. ஆனால் நான் உனக்காக இராமபிரானிடம் விண்ணப்பித்து அவர் உத்தரவுப்படி செய்கிறேன்.

ஹனுமான் இராமபிரானிடம் சென்றார். மலையரசனின் நிலையையும், விண்ணப்பத்தையும் தெரிவித்தார். இராமபிரான்- "அந்த மலை எனது பேரன்புக்குரியது. நீ அதன் மேன்மையை உயர்த்தினாய். த்வாபரயுகத்தில் நான் க்ருஷ்ண ரூபத்தில் அவதரிக்கும்பொழுது எனது கைங்கர்யத் தில் ஈடுபடுத்திக் கொள்வேன். ஏழு நாட்கள் என்னுடைய விரலால் இம்மலையைத் தாங்கி ஆயர்களை ரக்ஷிப்பேன்" என்று கூற ஹனுமான் வ்ரஜபூமிக்கு வந்து கோவர்தனத்திடம் பகவானின் செய்தியைக் கூறினார். ஹனுமானின் கிருபையால் கோவர்தனபர்வதம் ஸ்ரீராம கிருபைக்கு

இலக்காயிற்று. பகவானின் நித்யலீலைக்கு உதவும் பொருள் ஆயிற்று.

* * * * *

ஸுவேல பர்வதத்தில் பகவான் இலைப் படுக்கையில் (பர்ண சய்யா) சயனித்திருந்தார். ஸுக்ரீவனின் மடியில் இராமபிரானின் திருமுடியிருந்தது. ஹனுமானும், அங்கதனும் சரண சேவை செய்தபடி இருந்தனர். வில்லும், அம்பராத்தூணியும் அருகில் இருந்தன. லக்ஷ்மணன் பின்பக்கம் வீராஸனத்தில் அமர்ந்தபடி இராமபிரானை நோக்கியவாறு இருந்தார். பகவான் தன் கையில் உள்ள பாணத்தை தடவியபடியே சந்திரனைப் பார்த்தபடி அருகில் இருந்தவர்களிடம் கேட்டார்- "அன்பர்களே! சந்திரனிடம் இந்த கருமை ஏன் என்று உங்களுக்கு தோன்றும் காரணத்தைச் சொல்லுங்கள்." ஸுக்ரீவன், விபீஷணன், அங்கதன் முதலானோர் தங்கள் தங்களுக்கு தோன்றும் காரணத்தைச் சொன்னபின் ஹனுமான் கூறினார்- "பிரபோ! சந்திரன் தங்கள் சேவகன். தங்களுக்கு அவனிடம் பேரன்பு உண்டு. சந்திரன் தங்களை உள்ளத்தில் கொண்டுள்ளார். அவர் உள்ளத்தில் தாங்கள் இருக்கின்றீர்கள். தாங்களே சந்திரனின் உள்ளத்தில் ச்யாமஸுந்தர ரூபத்துடன் காணப்படுகின்றீர்." இதைக் கேட்ட எம்பெருமான் முறுவல் செய்ய, அனைவரும் மகிழ்ந்தனர்.

कह हनुमंत सुनहु प्रभु ससि तुम्हार प्रिय दास ।
तव मूरति बिधु उर बसति सोइ स्यामता अभास ॥

[ராமசரித மாநஸம். லங்கா காண்டம். தோஹா 12/க]

எல்லா இடத்திலும் இராமபிரானைப் பார்க்கும் ஹனுமான் சந்திரனிடத்திலும் இராமபிரானைப் பார்த்ததில் வியப்பு என்ன?

ராம ராவண யுத்தம் பயங்கரமாய் நடந்தது. ஹனுமான் அப்பொழுது எத்தனை அரக்கர்களை அழித்தார் என்பது ராமாயண அன்பர்களுக்கு தெரியாதது அல்ல. ஒவ்வொரு சமயத்திலும் ராமன், லக்ஷ்மணன், விபீஷணன், ஜாம்பவான் அனைவருக்கும் ஹனுமான் உதவினார். இந்த்ரஜித்துடன் போர் செய்யும்போது, லக்ஷ்மணன் சக்தி ஆயுதத்தால் அடிபட்டு மயங்கி விழுந்தார். இந்த்ரஜித்தும், அவனுக்கு நிகரான பல அரக்கர்களும் மிகவும் முயன்றும் லக்ஷ்மணனை பூமியிலிருந்து அசைக்க முடியவில்லை. ஹனுமான் அவரை அனாயாஸமாய் தூக்கி இராமபிரானிடம் கொண்டு சேர்த்தார். லக்ஷ்மணனை மயக்க நிலையில் பார்த்த இராமபிரான் கலங்கினார். இலங்கையில் உள்ள 'ஸுஷேணன்' எனும் வைத்தியர் உடனடியாக வந்தால் லக்ஷ்மணன் குணமடைவார் என ஜாம்பவான் கூறினார்.

ஹனுமான் இலங்கைக்குள் சென்றார். எதிரிகளின் வைத்தியர் என்பதால் இரவில் வரமாட்டாரோ என எண்ணிய ஹனுமான் அவரது வீட்டையே பெயர்த்து எடுத்து வந்தார். ஸுஷேணன் இராமபிரானின் படைக்குள் புகுந்து, லக்ஷ்மணனைப் பார்த்துவிட்டு த்ரோணபர்வதத்திலிருந்து இன்று இரவுக்குள் மூலிகைகள் கொண்டு வந்தால் லக்ஷ்மணன் பிழைத்து எழுவார் என்றார். ஹனுமான் பகவானை நினைத்தபடியே த்ரோணபர்வதத்திற்குக்

கிளம்பினார். இத்தகவல் ராவணனை எட்டியது. ஹனுமானை வழியிலேயே அதிக நேரம் தாமதிக்க வைத்து மறுநாள் சூரியோதயத்திற்கு முன் திரும்ப முடியாதபடி செய்ய ராவணன் 'காலநேமி' எனும் தைத்யனுடன் சதித்திட்டம் தீட்டினான். காலநேமி முனிவர் வேடம் தாங்கி ஹனுமானை ஏமாற்றப் பார்த்தான். ஆனால் மாயாபதியான பகவானின் தூதனிடம் யாருடைய மாயை செல்லுபடியாகும்? தெய்வச் செயலாய் அதை அறிந்த ஹனுமான் அப்போலி முனிவனை யமனுக்கு தட்சிணையாக்கிப் பயணத்தைத் தொடர்ந்தார்.

ஆஞ்ஜனேயர் த்ரோணபர்வதத்தை அடைந் தார். இரவு வேளையானதால் மூலிகைகளைத் தேட முடியவில்லை. ஒருக்கால் தெய்வத்தன்மை மிக்க அந்த மூலிகைகள் மறைந்தும் இருக்கலாம். இரவோடு இரவாய் இலங்கைக்கு செல்லவேண்டி யிருந்ததால் அவரால் தாமதிக்க முடியவில்லை. முழுதாக மலையையே பெயர்த்தெடுத்துக் கொண்டு திரும்பினார். திரும்பும் சமயத்தில் அயோத்தி குறுக்கிட்டது. தூரத்திலிருந்து பார்த்த பரதன் ஹனுமானை யாரோ ஓர் அரக்கன் என எண்ணினார். ஒரு சாதாரண பாணத்தை பிரயோகித்தார். பாணம் அடித்ததும் 'ராம்-ராம்' என்று கூறியபடி ஹனுமான் மயக்கமடைந்து வீழ்ந்தார். அவர் வாயிலிருந்து ராம நாமத்தைக் கேட்ட பரதன் ஓடிவந்து அவரைத் தெளிவிக்கப் பெருமுயற்சி செய்தார். கடைசியில் அவர், "எனது உள்ளத்தில் உண்மையான ராம பக்தி இருக்கு மேயானால் இந்த வானரம் பிழைத்து எழட்டும்" எனச் சொல்ல, ஹனுமான் எழுந்து அமர்ந்தார்.

பிறகு எல்லா விஷயங்களையும் ஹனுமான் கூறினார். பரதன் கழிவிரக்கத்தோடு தன்னையே நொந்து கொண்டார். ஹனுமானை பாணத்தில் அமர்ந்து செல்ல வேண்டினார். ஹனுமான் மிகுந்த பணிவுடன் மறுத்துவிட்டு த்ரோணாசலத்தை எடுத்துக் கொண்டு இலங்கையை அடைந்தார். அச்சமயம் மிகவும் கலங்கியிருந்த இராமபிரான் ஹனுமானை இறுகத் தழுவிக் கொண்டார். ஸுஷேணன் வைத்தியம் செய்ய, லக்ஷ்மணன் நலம் பெற்றார். நாற்புறங்களிலும் ஹனுமானின் புகழ் பாடப்பட்டது. ஸுஷேணனை அவன் வீட்டோடு உரிய இடத்தில் சேர்த்துவிட்டு திரும்பினார், ஹனுமான்.

இரவு வேளை. ஹனுமான் பாசறையைக் காவல் காத்து வந்தார். விபீஷணன் வேடம் தாங்கியபடி 'அஹிராவணன்' வந்தான். ஹனுமான் அவனைக் கூப்பிட்டு- "இந்த இரவில் எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டார். அவன்- "பகவானின் ஆணைப்படி ஸந்த்யா அனுஷ்டானத்திற்குப் போயிருந்தேன். திரும்ப தாமதமாகிவிட்டது. அவர் என்னை உடனேயே அழைத்தார்" என்றான். அனைவரும் உறங்கியபின் அஹிராவணன் ராமலக்ஷ்மணர்களை தோளில் வைத்து எடுத்துக் கொண்டு ஓடினான். பகவானை யாராவது கவர்ந்து செல்ல முடியுமா? லக்ஷ்மணனோ எப்போதுமே உறங்குவது கிடையாது. ஆனால் தன் பக்தனின் மகிமையை பிரகடனம் செய்ய நினைக்கும்பொழுது பிரபு சாதாரண மனிதனைப்போல் லீலை செய்கிறார். தற்பொழுது ஹனுமானின் ஆற்றலை

******************************************************************

அனைவரும் அறியச் செய்யவே அஹிராவணனுடன் பேசாமல் சென்றார்.

மறுநாள் காலை. படை முழுவதும் அமர்க்களப்பட்டது. ஸுக்ரீவன், ஜாம்பவான், விபீஷணன் எல்லோரும் கலங்கிப் போயிருந்தனர். ஹனுமான் இரவு நடந்ததைச் சொன்னார். உடனே விபீஷணன்- "இது அஹிராவணனுடைய மாயை தான். அவனைத் தவிர வேறு யாரும் எனது உருவத்தை தரிக்க முடியாது" என்றார். "அவன் எத்தகைய பலசாலியாய் இருந்தாலும், எவ்வளவு ரகசியமான இடத்தில் இருந்தாலும் அவனை அழித்து என் பிரபுவை மீட்டு வருவேன்" என்று சூளுரைத்துவிட்டு ஹனுமான் புறப்பட்டார். அஹிராவணன் ராமலக்ஷ்மணர்களை நாகலோகத்திற்கு எடுத்துச் சென்ற விஷயம் வழியில் தெரிந்தது. நாகலோகம் சென்று உள்ளே நுழைய முயன்ற மாருதியை 'மகரத்வஜன்' தடுத்தான். "நீ யார்? மாவீரனான ஹனுமானின் புதல்வன் நான் என்பது தெரியாதா? திருட்டுத்தனமாய் நுழைந்தால் மிகவும் துன்பப்படுவாய்" என்றான். இதைக் கேட்டு வியப்புற்ற ஹனுமான் அவனிடம் அறிமுகம் செய்து கொண்டு, "பையா! எனக்கு மக்கள் யாரும் கிடையாதே. பிறகு நீ எங்கிருந்து வந்தாய்?" என வினவ, மகரத்வஜன்- "தாங்கள் இலங்கைக்கு எரியூட்டியபின் கடலில் குளித்த பொழுது, தங்கள் வியர்வையை ஒரு மீன் விழுங்க, அதன் கர்ப்பத்திலிருந்து நான் பிறந்தேன்" என்று பதிலுரைத்தான். ஹனுமான் ராமலக்ஷ்மணர்களைப் பற்றி வினவினார். அவன்- "எனக்கு எதுவும் தெரியாது. தற்பொழுது எனது

யஜமானர் யாரையோ பலியிடப் போகிறார். அங்கு செல்ல யாருக்கும் அனுமதியில்லை. தங்களையும் அனுமதிக்க முடியாது" என்றான்.

இருவருக்கும் சண்டை மூண்டது. சண்டையில் ஒருவரையொருவர் மிஞ்சினர். ஹனுமான் அவனை வாலால் கட்டியபடி உள்ளே நுழைந்தார். இவர் கால் பட்ட உடனேயே அவர்கள் பூஜித்து வந்த தேவியின் சிலை பூமியில் புதைந்து போக, அதே இடத்தில் ஹனுமான் வாயைத் திறந்தபடி நின்று கொண்டார். தேவிதான் இந்த உருவில் ப்ரகடனம் ஆகியிருக்கின்றாள்; அவளை நன்கு பூஜை செய்யவேண்டும் என்று எண்ணிய அரக்கர்கள் பூஜைக்கான பழம், மாலை, அன்னம், வஸ்த்ரம் முதலியவற்றை அவர் முகத்திலேயே சமர்ப்பித்த னர். பலி கொடுக்க வேண்டிய நேரத்தில் ராமலக்ஷ்மணர்களை அழைத்து வந்தனர். அச்சமயம் பலவிதத்திலும் வேடிக்கைகள் செய்தபடி அரக்கர்கள் அவர்களுக்குத் தொல்லை தந்தனர். ராமலக்ஷ்மணர்கள் பேசாமல் இருந்தனர். முகம் சுளிக்கவும் இல்லை. "இப்பொழுது உங்களது ரக்ஷகனை நினைத்துக் கொள்ளுங்கள்" என்றான் அஹிராவணன். சிரித்தபடியே இராமபிரான்- "உனது தேவி உன்னையே சாப்பிடாமல் இருக்க வேண்டும்" என்றார். அவன் வாளை வீச இருந்த பொழுது ஹனுமான் கர்ஜித்தபடி அருகில் வந்து ராமலக்ஷ்மணர்களைத் தோளில் அமர்த்திக் கொண்டு, அஹிராவணன் கையிலிருந்த வாளைப் பறித்துவிட்டார். அஹிராவணனையும், மற்றைய அரக்கர்களையும் அழித்துவிட்டு, பகவானைப் பாசறைக்குக் கொண்டு சேர்த்தார். நாற்புறங்களி

லும் ஆனந்தகோஷமும், உற்சாகமும் ஏற்பட்டது. எல்லாத் திக்குகளிலிருந்தும் ஹனுமானுக்கு வாழ்த்தொலி கிளம்பின.

ஹனுமான் ஓயாமல் ராம கைங்கர்யத்தில் ஈடுபட்டிருப்பார். யுத்த சமயத்தில் பகலில் இராமபிரானுக்கு அருகிலோ, தள்ளியிருந்தோ போர்புரிபவர், இரவில் இராமபிரானுக்குப் பாதசேவை செய்வார். இராமபிரானிடமிருந்து தர்மம், பிரேமை, ஞானம் பற்றிய விஷயங்களைக் கேட்பார். எப்பொழுதாவது என்ன? அனேகமாய் பகவான் அவர் மேனியில் தன் கையை வைத்து அவரது எல்லாக் களைப்பையும் போக்குவார். பகவான் ஸ்ரீராமன் உறங்கும்பொழுது தனது நீண்ட வாலால் சுற்றுச்சுவரை எழுப்பி வாசலில் அமர்ந்தபடியே இரவு முழுவதும் காவலிருப்பார். அவ்வாறே காலை மலர்ந்தவுடன் போரில் ஈடுபடுவார். இக்கட்டான நிலை ஏற்பட்டால் ஜாம்பவான், ஸுக்ரீவன், அங்கதன் அனைவரும் ஹனுமானைத்தான் புகலடைவர்.

ராவணனுடன் போர் செய்யும்பொழுது ஹனுமான் விட்ட ஒரு குத்தால் ராவணன் மயங்கி வீழ்ந்தான். நினைவு வந்தபின் ஹனுமானை மிகவும் கொண்டாடினான். தன் வாழ்நாளில் இத்தகைய ஒரு வீரனை பார்த்ததே இல்லையென ஒப்புக் கொண்டான். ராவணனது அடியால் லக்ஷ்மணன் மயங்கி வீழ்ந்தார். தன் மகன் இந்த்ரஜித் முன்பு தூக்க முயன்றதைப் போலவே, லக்ஷ்மணனைத் தூக்கிச் செல்ல ராவணனும் விரும்பினான். அவனது முழுத்திறமையை உபயோகித்தும் லக்ஷ்மணனைத் தூக்க முடியவில்லை. இதைப்

பார்த்த ஹனுமான், தன் உடல் முழுவதும் ராவணனது அம்புகளால் துளைத்திருந்தபொழுதும் லக்ஷ்மணனது அருகில் சென்றார். ராவணனை ஒரு குத்துவிட்டார். இலகுவாக மலரைப் போல் லக்ஷ்மணனைத் தூக்கி இராமபிரானிடம் வந்தார். ஹனுமானை அணைத்தபடியே லக்ஷ்மணனிடம்- "தம்பி! நீ காலனுக்கும் மகாகாலன். அமரர்களைக் காக்க அவதரித்திருக்கும் நீ எப்படி மயக்கமுற்றாய்?" இராமபிரானுடைய வார்த்தையைக் கேட்ட லக்ஷ்மணன் எழுந்து இருமடங்கு உற்சாகத்துடன் போர்களத்திற்குச் சென்றார். ஹனுமானின் துணிவால் இவ்வளவு பெரிய அபாயம் கணத்தில் விலகியது.

* * * * *

ராமபிரானுக்கு வெற்றி கிட்டியது. வெற்றிச் செய்தியை ஸீதைக்கு கொண்டு செல்வது யார்? இராமபிரான் ஹனுமானை அழைத்துச் சொன்னார்- "ஆஞ்ஜனேயா! ஸீதை உன்னிடம் தான் மிகவும் ஸ்நேகம் கொண்டுள்ளாள். இந்த வெற்றிச் செய்தியைச் சொல்வதற்கு நீயே ஸீதையிடம் செல். மகாராஜா விபீஷணனின் அனுமதியுடன் அங்கு சென்று எனது, ஸுக்ரீவனது, லக்ஷ்மணனது நலனைச் சொல்லி, ராவணனுடைய வதத்தையும் தெரிவிப்பாயாக. ஸீதை மகிழும்படியாக விஷயத்தைச் சொல்லவும்." ஹனுமான் இலங்கையில் நுழைந்தார். இலங்கையின் அரக்கர்கள் ஹனுமானைக் கொண்டாடினர். விபீஷணனின் அனுமதியைப் பெற்றே அசோகவனத்தில் இருந்த ஸீதையிடம் சென்றார்.

தண்டம்போல் சாஷ்டாங்கமாய் வணங்கி அனைத்து செய்திகளையும் பணிவுடன் தெரிவித்தார். ஒரு கணம் ஸீதையால் எதுவும் பேச இயலவில்லை. மகிழ்ச்சியில் தொண்டை தழுதழுத்தது. கண்களில் கண்ணீர் பெருக "குழந்தாய்! இந்த மகிழ்ச்சியான செய்தியைக் கேட்ட என்னால் எதுவும் பேச முடியவில்லை. தவறாக நினைக்காதே. இதைவிட எனக்கு சுகமளிக்கும் செய்தி வேறு எதுவும் கிடையாது. இதற்குக் கைம்மாறாக உனக்கு எதைக் கொடுப்பேன் என ஆராய்ந்து கொண்டிருக்கிறேன். மகிழ்ச்சியான விஷயத்தைச் சொல்பவர்களுக்கு ஏதாவது கொடுப்பது வழக்கமாயிற்றே. மூவுலக சம்பத்தையும், எல்லா ஐச்வர்யங்களையும் உனக்குக் கொடுத்தாலும் எனக்கு நிறைவு ஏற்படாது. உன் உள்ளத்தில் பகவானின் அனன்ய பக்தி என்றும் நிறைந்திருக்கட்டும். நான் உனக்கு கடனாளியாகவே இருக்கின்றேன். எல்லா நற்குணங்களும் உனது உள்ளத்தில் நிலைபெறட்டும். இராமபிரான் உன்னிடம் எப்பொழுதும் கருணை சொரிந்து கொண்டிருப்பார்" என்று ஆசீர்வதித்தாள்.

ஆஞ்ஜனேயர் அஞ்சலி செய்தபடி- "அன்னையே! இத்தகைய அன்பு ததும்பும் வார்த்தைகளைத் தங்களைத் தவிர வேறு யார் கூறுவர்? என் உள்ளத்தில் ஸீதாராம யுகளத்தின் நினைவு நிறைந்திருக்க, அந்த நிழலில் அண்டியிருக்கும் எனக்கு இதைவிட வேறு என்ன வேண்டும்? தங்களுக்கு நான் என்ன சேவை செய்யவேண்டுமென உத்தரவிடுங்கள்" என்று சொல்ல ஸீதாதேவி- "நான் பகவானைப் பார்க்க

ஆர்வம் மிகுந்திருக்கின்றேன். இனி ஒரு கணம் கூடத் தாமதிக்க முடியாது" என பதிலுரைத்தாள். ஹனுமான் வேகமாய் அங்கிருந்து பகவான் ஸ்ரீராமனிடம் வந்தார். பிராட்டியின் மலர்ச்சியையும், இராமபிரானைப் பார்க்க இருக்கும் துடிப்பையும், அவளது வேண்டுகோளையும் இராமபிரானிடம் தெரிவித்தார். பிராட்டியை அழைத்து வரச்சொல்லி விபீஷணனுக்கு இராமபிரான் ஆணை பிறப்பித்தார்.

* * * * *

இராமபிரானும், ஸீதையும் லக்ஷ்மணன், ஸுக்ரீவன், விபீஷணன் முதலியோருடன் புஷ்பக விமானத்தில் ஏறி அயோத்திக்குத் திரும்பினர். பிரயாகையில் ஹனுமானை அழைத்து- "வாயுகுமாரா! நீ அயோத்தி சென்று பரதன் என்ன செய்கிறான் என்று பார். என் பிரிவில் அவனுக்கு ஒவ்வொரு கணமும் கல்பகாலம் போல் இருக்கும். என்னைப் பற்றிய செய்தியை அவனுக்கு தெரிவித்து அவனது செய்தியை எடுத்துக் கொண்டு விரைவில் என்னிடம் வா" என்று கூற ஹனுமானும் புறப்பட்டார்.

அயோத்தியில் இராமபிரானுக்காக பரத நம்பி* எந்த அளவு ஏங்கித் தவித்தார் என்பதை யாரும் ஊகம் பண்ண முடியாது. ஹனுமான் அந்த நிலையை நேரில் பார்த்தார். பரதன் தலையில் ஜடாபாரத்துடன் தர்பாஸனத்தில் அமர்ந்திருந்தார். அவரது உடல் உலர்ந்து மெலிந்திருந்தது.

---

* நம்பி - பக்தியில் பூர்ணமானவன்

கண்களிலிருந்து கண்ணீர் பெருகியபடியும், வாயிலிருந்து இடையறாது ராமநாமம் எழுந்தபடியும் இருந்தது. மற்றொருவர் வந்துள்ளார் என்ற நினைவுகூட இல்லாமல் ராமதியானத்தில் தன்மயமாகி இருந்தார். அவரது தியானம் தானாகவே கலைந்துவிடும்படி ஆஞ்ஜனேயர்- "யாருடைய பிரிவால் துயருற்றுள்ளீர்களோ, யாருடைய திருநாமங்களையும், குணங்களையும் ஆவ்ருத்தி செய்து கொண்டு இருக்கிறீர்களோ, தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் ரக்ஷகனான அந்த இராமபிரான், ஸீதாமாதா, லக்ஷ்மணனுடன் நலமாய் வந்து கொண்டு இருக்கின்றார்" என்று கூறினார். வாயுகுமாரனின் வார்த்தையைக் கேட்ட பரதன் உடலில் பிராண சஞ்சாரம் உண்டாயிற்று. நாடிதோறும் அமுதப்பெருக்கு ஏற்பட்டது. அவர் சட்டென எழுந்து ஹனுமானை மார்போடு ஆலிங்கனம் செய்து கொண்டார். ஹனுமானது அறிமுகம் ஆனபின் அவரது ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. மேலும், மேலும் இராமபிரானைப் பற்றிக் கேட்க ஹனுமானும் பல தடவை சொல்ல இருவருக்கும் முடிவற்ற ஆனந்தானுபவம் ஏற்பட்டது.

"ஐயா! தங்களுக்கு நான் என்ன கொடுப்பேன்? பதிலாகத் தங்களுக்குக் கொடுப்பதற்கு என்ன பொருள் இருக்கிறது? உமக்கு கடனாளியாக இருப்பதே எனக்கு மகிழ்ச்சி" என்று பரத நம்பி பகர அவரது சரணங்களில் விழுந்த ஆஞ்ஜனேயர் அவரது அன்பைப் புகழ்ந்தபடியே- "இராமபிரான் எப்பொழுதும் தங்களைப் பற்றியே பேசி வருகிறார். தங்களது

நற்குணங்களையே கூறுகிறார். தங்களது பெயரையே புலம்புகிறார்" என்று கூறி பரதனிடம் அனுமதி பெற்று அங்கிருந்து விடைபெற்றார்.

* * * * *

ஸ்ரீராமபட்டாபிஷேஹம் ஆயிற்று. இராம பிரான் தன் கைகளாலேயே ஸுக்ரீவன், விபீஷணன் முதலானோர்களுக்கு விலையுயர்ந்த ஆடை, அணிகலன்களையும், நவமணிகளையும் கொடுத்தார். ஆனால் என்ன நினைத்தாரோ, ஹனுமானுக்கு எதுவும் தரவில்லை. "ஹனுமானை ஏன் மறந்தார்?" என அனைவரும் சிந்தனை செய்தபடி இருந்தனர். அனைத்தையும் அறிந்த இராமபிரான் பேசாமல் இருந்தார். ஸீதாமாதா விற்கு பகவானின் லீலாரகசியம் தெரியுமானாலும், ஹனுமானின் மகிமையைக் காட்டுவதற்காக, தான் ஒரு லீலை செய்தாள். தன் கழுத்திலிருந்த விலையுயர்ந்த மணிமாலையைக் கழற்றி ஹனுமானுக்கு அளித்தாள். அனைவரும் அன்னையைக் கொண்டாடினர். ஹனுமானும் பேரன்புடன் அதை ஏற்றார். ஆனால் இது என்ன? அனைவரும் வியப்புடன் அடுத்த கணம் ஹனுமானைப் பார்த்தனர். ஹனுமான் மாலையிலிருந்து ஒவ்வொரு மணியாய் எடுத்து உடைத்து உற்றுப் பார்த்து தூக்கி எறிந்தார். இது தொடர்ந்தது. எத்தனை மணிகளை உடைத்து எறிந்தார் என்பது தெரியாது.

இராமபிரான் புன்முறுவலுடன் இருந்தார். ஸீதை கம்பீரமாய் இருக்க, பரத, சத்ருக்ன, லக்ஷ்மணர்கள் அதிசயத்துடன் பார்த்தபடி

இருந்தனர். ஆனால் சபையில் உள்ளோரால் மௌனமாய் இருக்க இயலவில்லை. அவர்கள்- "ஆஞ்ஜனேயா! நீ என்ன செய்கிறாய்? விலையுயர்ந்த இந்த மணிகளை மண்ணில் எறியாதே" என்றனர். "இவர் ஒரு வானரம் தானே. மணியின் மதிப்பு எப்படி தெரியும்?" என்றான் ஒருவன். பலரின் கோபத்தையும் பார்த்த ஹனுமான்- "சகோதரர்களே! ஏன் கோபப்படு கின்றீர்கள்? இந்த மணிகளின் மதிப்பு எனக்குத் தெரியும். இவை மிகவும் ஒளியுள்ளவையாய் உள்ளன. இவற்றை மிகவும் அதிக விலைக்கு விற்க முடியும். இவற்றை விலை கொடுத்து ஒருவனும் வாங்க முடியாமலும் போகலாம். இவற்றை அணிவதால் அழகும் கூடுகிறது. இதெல்லாம் தான் பெருமை தரும் விஷயமா? இல்லை, இல்லை. எந்தப் பொருளின் உள்ளத்தில் பகவான் இருக்கின்றாரோ, அதுவே பெருமை வாய்ந்தது. இதையே பெருமைக்கு உரைகல்லாக நான் நினைக்கிறேன். இந்த மணிகளுக்குள் பகவான் தென்படுகிறாரா என நான் தேடினேன். பகவான் தென்படவில்லை. இவற்றின் பளபளப்பு எனக்கு இருளாகவே தோன்றியது. இதனால் எனக்கு என்ன பயன்? இதில் எனக்கு ஏது ஆசை? ஒரு நாள் இல்லாவிட்டாலும் ஒரு நாள் இவை உடைந்து போகும், தொலைந்து போகும். எனவே இவற்றை நான் இன்றே உடைத்துவிட்டேன்" என்றார்.

ஹனுமானின் வார்த்தையைக் கேட்ட அனைவரும் அவர் மணிகளை உடைத்தெறிந்த காரணத்தை உணர்ந்தனர். ஆனால் சிலர் மனதில்

ஒரு சந்தேகம் எழும்ப அவர்கள்- "அப்படியானால் உனது உள்ளத்தில் இராமபிரான் இருக்கின்றாரா? இருந்தால் காண்பி! பார்ப்போம். இல்லையெனில் நீ ஏன் இதயபாரத்தை சுமக்கிறாய்" என்றனர். "நிச்சயம் என் உள்ளத்தில் பகவான் இருக்கிறார்" என்று கூறிய ஹனுமான் தனது இரு கைகளையும் மார்பில் வைத்து பிளக்க, உடன்பிறந்தார் புடைசூழ, அன்னை ஸீதையுடன் இராமபிரான் ரத்னஸிம்மாஸனத்தில் விளங்குவதைப் பார்த்தனர். ஹனுமானின் பெருமையை அனைவரும் பாடினர். பகவான் அரியணையிலிருந்து எழுந்து ஹனுமானை அணைத்துக் கொண்டார். இராமபிரானின் ஸ்பர்சத்தால் ஹனுமானின் மார்பு முன்னைவிட வலுவாக ஆயிற்று. பகவான் ஹனுமானுக்கு ஏன் எந்த பரிசும் தரவில்லை என்பதை அனைவரும் உணர்ந்தனர். ஸீதையும் புன்முறுவல் பூத்தாள்.

* * * * *

எத்தகைய பிள்ளை ஹனுமான்! ஸீதை எத்தகைய தாய்! இருவருடையவும் அன்பை என்ன சொல்வது? ஆயிரக்கணக்கான தாஸ, தாஸிகள் ஸீதையின் ஓரப்பார்வையை அறிந்து சேவை செய்யக் காத்திருந்தனர். ஆனால் அதனால் திருப்தியாகாத ஸீதை தனது அன்பு மகன் ஆஞ்ஜனேயனுக்கு தனது கைகளால் சமைத்து ஊட்ட நினைத்தாள். பலவிதமான தின்பண்டங்கள் தயார் செய்தாள். ஹனுமான் உணவருந்த அமர்ந்தார். தாயின் கையால் ஆன சமையல் எத்தகைய ருசியானது? ஹனுமான் சாப்பிடத் தொடங்கினார். எவ்வளவு சாப்பிட்டோம் என்பது

அவருக்கே தெரியவில்லை. சமையல் செய்தது முழுவதும் தீர்ந்து போயும் ஹனுமான் ஓயவில்லை. ஸீதை தவித்துப் போய்விட்டாள். வழி தெரியாமல் இராமபிரானை நினைத்தாள். ஹனுமான் உருவில் சிவபெருமானே உணவருந்துவதைப் பார்த்தாள். பிரளய காலத்தில் உலகனைத்தையும் விழுங்கும் மகாகாலனுக்கும் காலனான ஹனுமானின் வயிறு சிறு பண்டங்களால் எவ்வாறு நிரம்பும்? அவள் மரியாதையுடன் ஹனுமானைக் கொண்டாடி ஹனுமானின் பின்பக்கம் சென்று அவர் சிரஸில் **"ஓம் நம: சிவாய"** என எழுதி பிறகு உணவைப் பரிமாறினாள். அந்த அளவில் ஹனுமான் திருப்தியடைந்தார். இவ்வாறு ஸீதாமாதா ஹனுமானை சிவரூபமாய் ஏற்றாள்.

* * * * *

இராமபிரானின் சேவை முழுவதும் ஹனுமானே செய்தார். மற்றவர்களுக்கு நேரம் கிடைக்காதபடி தன் பணியில் கவனமாய் இருந்தார். பரதன், சத்ருக்னன், லக்ஷ்மணன் முதலியோர் பகவானின் கைங்கர்யத்திற்கு ஆசைப்பட்டுக் கொண்டே இருக்கின்றனர். கடைசியில் ஒரு உபாயத்தை தீர்மானித்தனர். இராமபிரானின் எல்லா சேவைகளையும் பிரித்து ஒவ்வொருவரும் ஒரொரு சமயத்தில் ஒரு காரியத்தைச் செய்வது என ஒரு வழக்கத்தை ஏற்படுத்தினர். ஹனுமானுக்கு அதில் ஏதும் இடமளிக்கப்படவில்லை. ஸீதையின் மூலம் இத்திட்டம் இராமபிரானிடம் தெரிவிக்கப்பட்டது. அதைப் பார்த்த இராமபிரான் புன்சிரிப்புடன்

**********************************************************

ஹனுமானிடம்- "இது உனக்கு திருப்தியளிக்கிறதா?" என்று வினவினார். ஹனுமான்- "பகவானே! எல்லோருடைய அனுமதியும், ஸீதையின் பரிந்துரையும் இருக்குமேயானால் இதில் விடப்பட்ட ஏதாவது ஒரு பணி என்னுடையதாக இருக்கட்டும்" என்றார். இராமபிரானும் மற்றவர் களிடம்- "சகோதரர்களே! நன்றாக ஆராய்ந்து பாருங்கள்" என வினவ எல்லோரும் பார்த்தனர். ஒரு பணியும் விடுபடவில்லை. அனைவரும் ஆஞ்ஜனேயரின் வார்த்தையை வாழ்த்த, பிரபுவால் அந்த யோசனை ஏற்றுக் கொள்ளப்பட்டது.

ஹனுமான்- "பிரபோ! மகாராஜா கொட்டாவிவிட்டால் கைசொடுக்கு போட வேண்டும் என்பது அரச வழக்கம். இதுவே என் பணியாய் இருக்கட்டும்" என்றார். எல்லோரும் இதை சாதாரண காரியமாய் எண்ணினர். இராமபிரானும் புன்முறுவலுடன் அனுமதித்தார். பகவத் கைங்கர்யத்தில் எத்தகைய நுண்ணறிவு ஹனுமானுக்கு இருந்தது என்பதைப் பார்த்த பரத நம்பி திகைத்தார்.

தற்பொழுது ஹனுமானின் முறை வந்தது. எம்பெருமான் செல்லும்பொழுது, உலவும் பொழுது, உறங்கும்பொழுது, உணவருந்தும் பொழுது எப்பொழுதும் அவருடனேயே ஹனுமான் இருக்கத் துவங்கினார். இராமபிரான் நடக்கும் பொழுது ஹனுமான் அவருக்கு முன்னால் பகவானைப் பார்த்தபடியே பின்னடையாகச் செல்வார். பகவான் தூங்கும் பொழுதும் சிறிது தூரத்தில் நின்றபடி பகவானின் மதிமுகத்தை

***************************************************************

பார்த்தபடியே இருப்பார். யாராவது தடுத்தால் "பகவானுக்கு எப்பொழுது கொட்டாவி வரும் என்பது தெரியாதே" எனச் சொல்லி பதில் பேச முடியாமல் செய்துவிடுவார். ஸீதைக்கும் ராமசேவைக்கு இது இடையூறாகவே இருந்தது. லக்ஷ்மணனும், சத்ருக்னனும் பயந்துவிட்டனர். இராமபிரான் தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டார். கடைசியில் ஸீதை சொன்னதன் பேரில் இராமபிரான் இந்த புது யோசனையை மாற்றிக் கொள்ள ஹனுமான் பழையபடியே எப்பொழுதும் சேவை செய்து வந்தார்.

* * * * *

இராமபிரானுக்கு அனைவரிலும் ஹனுமானிடம் மிக அதிகமான அன்பு இருப்பதாய் பரதன், சத்ருக்னன் முதலானோர் நினைத்தனர். அது உண்மையும்கூட. ஏதாவது இராமபிரானிடம் கேட்க வேண்டியிருந்தாலும் ஆஞ்ஜனேயரின் மூலமாகவே கேட்பார்கள். ஹனுமானும் தானே இராம பிரானிடமும், ஸீதாமாதாவிடமும் பலவிதமாய் கேள்விகள் கேட்டு ஜீவன், சிவன் சம்பந்தமாய் தத்துவக்ஞானம் பெற்றார். இராமபிரான் பல தடவை அவருக்கு தத்துவக்ஞானமும், வேதாந்தத்தின் அனைத்து ரகசியங்களையும் அருளியிருக்கிறார். அத்யாத்ம ராமாயணத்தின் தொடக்கமே இப்படித்தான். பகவான் ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் அர்ஜுனன், உத்தவனுக்கு செய்த உபதேசங்களை ஸ்ரீராமாவதாரத்தில் ஹனுமானுக்கு செய்ததாய் பிரும்மாண்டபுராணம் விவரிக்கின்றது. ஹனுமான் ஞானமூர்த்தி என்பது நிறைய இடங்களில்

தெளிவாகிறது. சிவனாய் இருக்கும் அவரிடத்தில் இது ஆச்சரியமா என்ன?

ஹனுமான் எப்பொழுதும் நிறைய சேவை செய்வதைப் பார்த்து இராமபிரான்- "ஆஞ்ஜனேயா! நீ என்னுடையவே ஸ்வரூபம். ஏன் இவ்வளவு சேவை செய்யவேண்டும்? பேசாமல் ஆனந்த அனுபவத்திலேயே இருக்கலாம்" என்று கூற ஹனுமான் சொல்கிறார்- "பிரபோ! தாங்கள் சொல்வது சத்தியமே: சேவை செய்தால் நான் தங்களுடையவே ஸ்வரூபமாய் இருக்கமாட்டேனா? சேவை செய்யும் சமயத்தில் ஆனந்த அனுபவம் ஏற்படாதா? சரீரம் எனும் பார்வையில் நான் தங்கள் அடிமை. சரீரம் எப்பொழுதும் தங்களுடையவும், தங்கள் அடியார்களுடையவும் சேவையிலேயே ஈடுபட்டிருக்கும். இதுவே இதன் பயன். ஜீவன் எனும் பார்வையில் நான் தங்கள் அம்சம். தங்களைவிட்டுப் பிரியாமல் தங்கள் ஸன்னிதியிலேயே இருக்க வேண்டும் என்பதே விருப்பம். தத்துவப் பார்வையில் நான் தங்களுடையவே ஸ்வரூபம். அந்த நோக்கில் பேச வேண்டியதோ, கேட்க வேண்டியதோ என்ன இருக்கின்றது?"* ஹனுமானின் வார்த்தையைக் கேட்ட ரகுவீரன் மகிழ்ச்சியடைந்தார்.

* * * * *

இராமபிரானுடைய அச்வமேத யாகத்திற் கான குதிரை அவிழ்த்துவிடப்பட்டது. சத்ருக்னன்,

---

* देहदृष्ट्या तु दासोऽहं जीवदृष्ट्या त्वदंशकः ।
आत्मदृष्ट्या त्वमेवाहमिति मे निश्चिता मतिः ॥

புஷ்கலன், லக்ஷ்மீநிதி முதலிய மஹாவீரர்கள் அதன் பாதுகாவலுக்கு நியமிக்கப்பட்டனர். ஹனுமானும் அவர்களுடன் இருந்தார். எவ்வளவு இடங்களில் பெரும் போர் நேரிட்டது. ஹனுமான் அவைகளில் எத்தகைய லட்சியத்துடன், வீரமுடன் போரிட்டார் போன்ற விஷயங்கள் பத்மபுராணம் பாதாளகண்டத்தைப் படிக்கும்பொழுது தெரிய வருகிறது. இங்கு சில நிகழ்ச்சிகள் மட்டும் கோடி காட்டப்படுகின்றன.

சக்ராங்க நாட்டு அரசன் ஸுபாஹுவுடன் போர் நடந்து கொண்டிருந்தது. பல வீரர்கள் இறந்தனர். பலர் காயமுற்றனர். கடைசியில் ஸுபாஹுவிற்கும், ஹனுமானுக்கும் போர் நடைபெற்றது. ஹனுமான் ஸுபாஹுவின் மார்பில் ஓர் உதைவிட்டதும் அவன் நினைவிழந்தான். மயக்கத்தில் தான் அயோத்தியில் இருப்பதாகவும், ஸரயூ நதிக்கரையில் இராமபிரான் ஒரு வேள்வி நடத்த, அதில் அனந்த கோடி பிரும்மாண்ட நாயகர்களான பிரம்மா முதலியோர் இராமபிரானை துதிப்பதாகவும், நாரதர் உள்ளிட்ட முனிவர்கள் வீணை, மிருதங்கம் முதலான வாத்தியங்களுடன் இராமபிரானின் குணங்களையும், புகழையும் பாடிக் கொண்டிருப்பதாகவும் கண்டான். இராமபிரானின் ச்யாமஸுந்தர சோபையில் மூழ்கி வெகுநேரம் மயங்கியிருந்த ஸுபாஹுவிற்கு மூர்ச்சை தெளிந்தது. அக்ஞானமும் அழிந்தது. அவன் முனிவர் ஒருவரின் சாபக்கதையைச் சொல்லி ஹனுமானின் மகிமையைப் பாடினான். "இவரின் பாதஸ்பர்சத்தால் எனக்கு ராமதத்துவக்ஞானம்

உண்டாயிற்று. போரை நிறுத்துங்கள். காணிக்கைகளுடன் அயோத்திக்கு புறப்படுங்கள். இராமபிரானின் வேள்வியில் கைங்கர்யம் செய்யுங்கள்" என்று கூற ஹனுமான் முதலியோருக்கு பூஜை செய்து அவர்கள் அயோத்தி வந்தனர். ஹனுமான் யாகக் குதிரையுடன் மேற்கொண்டு புறப்பட்டார்.

அக்குதிரை தேவபுர அரசன் சிவபக்தனான வீரமணியால் கட்டப்பட்டபொழுது, பயங்கரமான போர் தொடங்கியது. வீரமணியின் பக்திக்கு வசப்பட்ட சிவபெருமான் தானே வந்து போர் செய்ய சத்ருக்னன், புஷ்கலன் முதலானோர் மயங்கி உயிர்போன நிலையில் வீழ்ந்தனர். ஆஞ்ஜனேயர் மட்டும் போர் புரிந்து கொண்டிருந்தார். ஒருபுறம் பக்தனாகவும், மறுபுறம் பகவானாகவும் இருந்துகொண்டு போர் புரியும் சிவபெருமானின் லீலையை என்னவென்பது! இருபக்கமும் சிவபெருமான் என்றால் யார் தோற்பார்கள். வாயுகுமாரர் கம்பீரமாக, "சிவன், ராமபக்தன் என நான் உணர்ந்து இருக்கின்றேன். ஆனால் இராமபிரானின் யாகக் குதிரையை நாங்கள் காத்துவர அதற்கு இடையூறு புரியும் உமது பக்தி இவ்வளவுதானா?" என்றார். சிவபெருமான்- "தம்பி! சரியாகச் சொன்னாய். எனக்கு பகவத் பக்தி எங்கு இருக்கிறது? ஆனால் உனது வார்த்தை மிகவும் நல்லதாயிற்று. எனக்கு பகவானின் நினைவை ஏற்படுத்தியது. ஆனால் நான் என் செய்வேன்? வீரமணியின் பக்திக்கு வசப்பட்டவன் நான். அவன் பக்கமாய் நான் போர் புரிந்தே ஆகவேண்டும்" என்று பகர்ந்தார்.

**************************************************************

பயங்கரமான போர் தொடங்கியது. வாயுகுமாரனின் தாக்குதலால் சிவபெருமானின் ரதம் நொறுங்கியது. அவரது ஆயுதங்கள் பயனற்றுப் போயின. அவரது சரீரம் தளர்ந்தது. நந்தி ஓடத் துவங்கினார். சிவபெருமான் ஹனுமானை அழைத்து கூறத் தொடங்கினார்- "வீரனே! நீ தன்யன். உனது பகவத் பக்தி பெருமை வாய்ந்தது. உனது வீர்யத்தையும், பகவத் பக்தியையும் பார்த்து மகிழ்ச்சியடைகிறேன். வேள்வி, தவம் முதலியவற்றாலும் கிடைத்தற்கரிய வரங்களை அருள்வதற்குத் தயாராக உள்ளேன். கேள் அப்பனே! உனக்கு எது விருப்பமோ அதை கேட்டுக் கொள்."

ஹனுமான் சொல்கிறார்- "சங்கரா! பகவான் இராமபிரானின் கருணையால் எனக்கு எந்தப் பொருளிலும் ஆசை கிடையாது. தாங்கள் இப்போரினால் என்னிடம் சந்தோஷமடைந்திருப் பீர்கள் என்பதால் தங்களிடம் ஒருதவி கோருகிறேன். போரில் புஷ்கலன் இறந்துவிட்டான். சத்ருக்னர் மயங்கியுள்ளார். வீரர்கள் படுகாயம் அடைந்தவர்களாய் யுத்தபூமியில் வீழ்ந்துள்ளனர். தாங்கள் தங்கள் கணங்களுடன் இவர்களைப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் மூலிகைகள் கொண்டு வருவதற்கு த்ரோணாசலம் செல்கிறேன். ஒருக்கால் தேவர்கள் தடுத்தால் அங்கும் யுத்தம் ஏற்பட்டு தாமதம் ஆகலாம். அதுவரை இந்த வீரர்களுக்கு ஏதும் தீங்கு நேரிடலாகாது." வானர வீரனின் வார்த்தைகளை சிவபெருமான் ஏற்க, ஹனுமான் புறப்பட்டுச் சென்றார்.

திருப்பாற்கடலையடைந்து த்ரோணாசலத்தை தன் வாலதியில் சுருட்டினார். அதைத் தூக்கியபடி அங்கிருந்து புறப்பட்டபொழுது அதன் ரக்ஷகர் களான தேவர்கள் அவரை முற்றுகையிட்டனர். ஆனால் ஆஞ்ஜனேயர் எதிரில் அவர்கள் யாரும் செல்ல முடியாமல் காயமடைந்து புறமுதுகிட்டனர். அவர்கள் இந்த்ரனிடம் சென்று ஒரு வானரன் த்ரோணாசலத்தை எடுத்துச் செல்கிறான்; எங்களது படைக்கலங்கள் அவனிடம் செல்லுபடியாகவில்லை என்று கூற இந்த்ரன் பயந்து தங்கள் குலகுரு ப்ருஹஸ்பதியிடம் சென்றான். ப்ருஹஸ்பதி அந்த வானரன் ஹனுமான்தான் என்பதை உணர்த்தி அவரை உபசரிக்கச் சொன்னார். இந்த்ரன்- "ப்ரு ஹஸ்பதி பகவானே! எங்கள் இனத்தவர்களுக்கு த்ரோணாசலம்தான் ஜீவனாதாரம். ஹனுமான் அதை எடுத்துச் செல்வாரேயானால் தேவ இனம் அழிந்துவிடும். ஹனுமானின் காரியமும் வெற்றி பெறவேண்டும், எங்கள் மூலிகைகளும் காக்கப்பட வேண்டும். அதற்கான ஏதாவது உபாயங்கள் செய்யுங்கள்" என்று வேண்டினான்.

இந்த்ரன் மற்றும் தேவர்களுடன் ப்ருஹஸ்பதி ஹனுமானிடம் வந்தார். அமரர்கள் அவரிடம் மன்றாடி, தங்களது தவற்றுக்கு மன்னிப்புக் கோரினார்கள். அவரது விருப்பம் நிறைவேற வரமளித்து அவருக்கு ம்ருதஸஞ்ஜீவினி என்ற மூலிகையைக் கொடுத்தனர். ஹனுமான் அதை எடுத்துக் கொண்டு போர்களத்திற்கு வந்தார். நாற்புறமும் இருந்து அவ்ருக்கு வாழ்த்துக்கள் எழுந்தன. பின்னர், அவர் புஷ்கலன் அருகில் மூலிகைகளுடன் சென்றார். இறந்து கிடந்த

புஷ்கலனிடம் பிரயோகித்தபடியே- "நான் மனது, வாக்கு, சரீரங்களால் இராமபிரானை அறிந்திருப்பேனேயானால், அவரது ஆணையை நிறைவேற்றுபவன் என்பது உண்மையானால், என் பார்வையில் அவரைத் தவிர வேறு பொருள் கிடையாது என்பது சத்தியமானால் இந்த மூலிகையால் புஷ்கலன் பிழைக்கட்டும்"* என்று கூறித் துண்டித்து கிடந்த அவனது தலையை உடலுடன் சேர்க்க புஷ்கலன் உயிர் பெற்றெழுந்து சிவபெருமானுடன் போர் செய்ய ஓடினான்.

ஹனுமான் சத்ருக்னரிடம் சென்றார். சத்ருக்னர் மூர்ச்சையிலேயே "ராம்-ராம்", "ரகுநந்தன-ரகுநந்தன" என்று கூவியபடி இராமபிரானின் லீலைகளை புலம்பிக் கொண்டிருந்தார். ஹனுமான் மூலிகையை அருகில் கொண்டு சென்றபடி- "இராமபிரான் கிருபையால் நான் நித்ய பிரம்மசாரியாயிருக்கிறேன். எனது பிரம்மசர்யத்துக்கு தடையேதும் வராது என்பது உண்மையானால் சத்ருக்னர் எழுந்து கொள்ளட்டும்"** என்று கூற சத்ருக்னர் எழுந்து- "சிவன் எங்கு இருக்கின்றார்? அவரை அடித்து வீழ்த்துவேன்" என்று கூவியபடி யுத்தபூமியில் ஓடினார். மறுபடியும் கடும் போர் நிகழ வீரமணி மயங்கி வீழ்ந்தான். சத்ருக்னரும், சிவபெருமானும் போரிட்டனர். சிவபெருமானின் பாணங்களால் சத்ருக்னர் கலங்கியபொழுது, ஹனுமான்-

---

* यद्यहं मनसा वाचा कर्मणा राघवं प्रति।
जानामि तर्हि एतेन भेषजेनाशु जीवतु॥

** यद्यहं ब्रह्मचर्यं च जन्मपर्यन्तमुद्यतः।
पालयामि तदा वीरः शत्रुघ्नो जीवतु क्षणात्॥

"அண்ணாவை நினைவுகொள். காரியத்தில் வெற்றி பெறுவாய்" என்று கூற சத்ருக்னர் அவ்வாறே செய்தார். இராமபிரான் அங்கு எழுந்தருள சிவபெருமான் மிகுந்த ஆர்வத்துடனும், பேரன்புடனும் இராமபிரானைத் துதித்து தனது தவறு மன்னிக்க முடியாதது எனக் கூறி மன்னிப்புக் கோரினார்.

இராமபிரான்- "தேவாதிதேவ! மஹாதேவ!! தாங்கள் மிகவும் சரியாகத்தான் செய்தீர்கள். தமது பக்தர்களைக் காப்பதுதான் தேவர்களின் நெறி. தாங்கள் என் உள்ளத்தில் இருக்கின்றீர். நான் தங்கள் உள்ளத்தில் இருக்கின்றேன். நாம் இருவரும் ஒருவரே. யார் நம் இருவருள் வேற்றுமை பார்க்கின்றார்களோ, அவர்கள் நரகத்தையடை கின்றனர். தங்கள் பக்தன் என் பக்தன் ஆவான். என் பக்தனும் பக்தியுடன் தங்களை வணங்குகிறான்"* என்று கூறி இறந்தவர்களுக்கு உயிர் கொடுத்தார். காயமடைந்தவர்களை நலமுறச் செய்தார். அரசன் வீரமணி தனது செல்வம் அனைத்தையும் சமர்ப்பித்து ராமபக்தன் ஆனான். ஹனுமான் குதிரையுடன் மேலும் சென்றார்.

* * * * *

---

* देवानामयमेवास्ति धर्मो भक्तस्य पालनम्।
त्वया साधु कृतं कर्म यद्भक्तो रक्षितोऽधुना॥
ममासि हृदये शर्व भवतो हृदये त्वहम्।
आवयोरन्तरं नास्ति मूढाः पश्यन्ति दुर्धियः॥
ये भेदं विदधत्यद्धा आवयोरेकरूपयोः।
कुम्भीपाकेषु पच्यन्ते नराः कल्पसहस्रकम्॥
ये त्वद्भक्तास्त एवासन्मद्भक्ता धर्मसंयुताः।
मद्भक्ता अपि भूयस्था भक्त्या तव नतिङ्कराः॥

இராமபிரான் அரியணை ஏறியதும், அனைத்து வானரர்களுக்கும், கரடிகளுக்கும் விடைகொடுத்து அனுப்பினார். ஹனுமானது முறையும் வந்தது. ஹனுமான் இராமபிரான் சரணங்களில் வீழ்ந்து- "நான் தங்கள் திருவடி நிழலிலேயே இருக்கின்றேன்" என வேண்டினார். பகவான் அனுமதி அளித்தார். இத்தகைய பக்தர்களை பகவான் எப்பொழுது தான் கைவிட்டிருக்கின்றார்? பகவான் தன் அவதாரத்தைப் பூர்த்தி செய்துகொள்ளும் நேரத்தில் ஹனுமானை அழைத்து- "நான் தற்பொழுது எனது லோகத்திற்குச் செல்லப் போகிறேன். நீ வருந்தக்கூடாது. நீ பூமியிலிருந்து கொண்டே அமைதியையும், அன்பையும், மெய்ஞானத்தையும் பரப்புவாயாக. நீ விரும்பா விட்டாலும் இப்பணியைச் செய்தாக வேண்டும். நீ என்னை நினைக்கும்பொழுது உன் எதிரில் தோன்றுவேன். எனது கதை, கீர்த்தனம் நடக்கும் இடங்களில் நீ இருப்பாயாக. நான் உன்னை விட்டுச் சிறிதும் பிரியாதிருப்பேன். இதுவும் எனது லீலைகளுள் ஒன்றுதான்" என்று கூற ஹனுமான் கைகுவித்தபடி பதிலுரைக்கிறார்- "பிரபோ! நான் இருக்கிறேன். எங்கெங்கு தேவரீரது கதை நடந்தாலும் அங்கு சென்று செவிமடுப்பேன். அதுதான் என் வாழ்க்கைக்கு பற்றுகோல்." பகவான் சந்தோஷமடைந்தார். பகவான் ஸ்ரீராமன் ஒரு சமயம் ஹனுமனிடம் உரைத்தார்- "என் கதை இவ்வுலகில் இருக்கும்வரை உனது புகழும், ஆயுளும் இருக்கும். உலகம் உள்ளளவும், என் கதையும் இருக்கும். நீ எனக்குப் பேருதவிகள் செய்தாய். அவற்றுள் ஒன்றுக்கும் என் உயிரைக்

கொடுத்தாலும் ஈடாகாது. உனது உபகாரத்திற்கு நான் பதில் செய்ய முடியாது என்பதே உண்மை. உனது வாழ்க்கையில் மற்றவர்களிடம் உதவிகோரும் நிலை உனக்கு வரவே வேண்டாம். ஏனெனில் மனிதன் துன்புறும் சமயங்களில்தான் உதவிபெறத் தக்கவனாகிறான்."*

பகவான் இராமபிரான் தன் லீலைகளை முடித்துக் கொண்டாலும் அவர் பக்தன் சிவபெருமானின் லீலை நடந்து கொண்டே இருக்கின்றது. இராமபிரானைக்காட்டிலும் அவரது அடியார்கள் உயர்ந்தவர்கள். 'राम ते अधिक राम कर दासा।'

*  *  *  *  *

( 4 )

இராமபிரான் பரமபதத்திற்கு எழுந்தருளிய பின் இராமபிரானின் திருநாமம், லீலைகள், குணங்களை **சிரவண, கீர்த்தனம் செய்வது ஒன்றே ஹனுமானின் காரியமாய் இருந்தது. எங்கு ஸத்ஸங்கம் நடந்தாலும் ஹனுமான் அங்கு

---

* चरिष्यति कथा यावदेषा लोके च मामिका।
तावत्ते भविता कीर्तिः शरीरेऽप्यसवस्तथा॥
लोका हि यावत्स्थास्यन्ति यावत्स्थास्यति मे कथा।
एकैकस्योपकारस्य प्राणान् दास्यामि ते कपे॥
शेषस्येहोपकाराणां भवाम ऋणिनो वयम्।
मदङ्गे जीर्णतां यातु यत्त्वयोपकृतं कपे॥
नरः प्रत्युपकाराणामापत्स्वायाति पात्रताम्।
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

[வால்மீகி ராமாயணம். உத்தர காண்டம். 40/21-24]

** சிரவணம் - பிறர் சொல்லக் கேட்பது.
கீர்த்தனம் - தானே பாடுவது.

***********************************************************************

அமர்ந்துவிடுவார். ஆர்ஷ்டிஷேண முனிவருடன் கிம்புருஷவர்ஷத்தில் இருந்து கொண்டு பகவானின் குணகீர்த்தனத்தைக் கேட்டுக் கொண்டிருக்கின்றார். கந்தர்வர்களின் பண்ணலைகள் தம் சுவையால் மூவுலகையும் மோகிக்கச் செய்யும்பொழுது அந்த அமுத கீர்த்தனத்திலிருந்து கிளம்பும் இராமபிரானின் லீலைகளை ப்ரத்யக்ஷமாய் அனுபவித்தபடி இருக்கின்றார். பல யுகங்கள் கழிந்தாலும் ஒரு கணம்கூட அவர் பகவானை மறந்து இருந்தது இல்லை. பகவானைத் தவிர வேறு எவரும் அவர் எதிரில் வருவதில்லை.

வைவஸ்வத மன்வந்தரத்தின் இருபத்தெட் டாவது சதுர்யுகத்தின் த்வாபரயுகத்தில் ஸ்ரீக்ருஷ்ணாவதாரம் நடைபெற்றது. ஸ்ரீக்ருஷ்ண னும், இராமபிரானும் ஒருவரேதான். இருவரல்லர். அவர் தன் பரமப்ரிய பக்தனான ஹனுமான் இல்லாமல் எப்படியிருப்பார்? ஹனுமானை அழைக்க எண்ணினார். அதனுடன் ஏதாவது திருவிளையாடலும் அமையவேண்டும். ஹனுமானின் பெருமையும் வெளிப்படவேண்டும். கண்ணன் அடியார்கள் எனக் கூறிக் கொள்பவர்களின் குற்றங்குறைகளும் களையப் பெறவேண்டும் என நினைத்தார். ஸ்ரீக்ருஷ்ணனின் சங்கல்பத்தால் த்வாரகாவின் அருகில் ஒரு தோட்டத்திற்கு ஹனுமான் வந்தார். ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் செய்தபடி பழங்களை அருந்தவும், சிறு கிளைகளை முறிக்கவும் தொடங்கினார்.

சத்தியபாமைக்காக பகவான் பாரிஜாதம் கொணர்ந்திருந்த தருணம் அது. அனைவரிலும் தன்னிடம் தான் பகவானுக்கு பிரேமை அதிகம்

என்ற செருக்கு சத்தியபாமைக்கு இருந்தது. தானே அனைவரையும்விட அழகி எனும் எண்ணமும் இருந்தது. பேச்சோடு பேச்சாக ஒரு நாள் "ஸீதைக்காக காட்டிலும், மேட்டிலும் திரிந்தீர்களே. அவள் என்னைவிட அழகியா என்ன?" என்று கேட்கவும் செய்தாள். பகவான் பேசாமல் இருந்தார். ஸுதர்சன சக்கரத்திற்கும் "இந்த்ரனின் வஜ்ராயுதத்தையே மழுங்கச் செய்தவன் நான்" எனும் எண்ணம் இருந்தது. கருடனுக்கும் "என் உதவியால்தான் ஸ்ரீக்ருஷ்ணன் இந்த்ரனை வெற்றி கொண்டார்" எனும் எண்ணம் இருந்தது. மூவருடைய கர்வத்தையும் போக்க நினைத்தார் பகவான். தனது அடியவர்கள் மதங்கொண்டவர்களாய் இருப்பது எம்பெருமானுக்குப் பொறுக்காது. பகவானின் கிருபை தன்யமானது.

கருடனை அழைத்து ஸ்ரீக்ருஷ்ணன் உத்தரவிட்டார்- "கருடா! த்வாரகா அருகில் உள்ள தோட்டத்தில் ஒரு வானரம் வந்திருக்கிறது. அதைப் பிடித்து வா. உன்னால் பிடிக்க முடியுமானால் தனியாகப் போ. இல்லாவிடில் படையை அழைத்துக் கொண்டு போ." கருடன் தன் மனதிற்குள் "ஒரு சாதாரண குரங்கைப் பிடிப்பதற்கு என்னைப் போய் பகவான் அனுப்புகிறாரே. போதாததற்கு சேனையையும் அழைத்துச் செல்லச் சொல்கிறார். இது எனக்கு எத்தகைய அவமானம்! நான் அந்த குரங்கை நார்நாராகக் கிழிப்பேன்" என எண்ணியபடி தனியாக ஹனுமான் இருக்குமிடம் சென்றார். முதுகைக் காட்டியபடி ஹனுமான் பழம் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். பெரும் ஆனந்தத்தில்

"ராம்-ராம்" என கீர்த்தனம் செய்து கொண்டிருந்தார். கருடன் முதலில் அதட்டி, திட்டி ஹனுமானைக் கொண்டு செல்ல முயன்றார். ஹனுமான் எதற்கும் அசைந்து கொடுக்கவில்லை. கருடன் அவரைப் பிடிக்க வந்தபோது வெகுநேரம் சிறு பறவைகளுடன் ஜனங்கள் விளையாடுவது போல் ஹனுமான் விளையாடினார். கருடன் அலட்சியப்படுத்தியபொழுது தனது வாலால் அவரை சுருட்டி மெல்ல அமுக்கினார். கருடன் துடிதுடித்து ஸ்ரீக்ருஷ்ணநாமத்தைச் சொல்லி- "ஸ்ரீக்ருஷ்ணன் ஆக்ஞையால் உம்மை அழைத்துச் செல்ல வந்திருக்கிறேன். அவர் சாட்சாத் நாராயணன். புறப்படுங்கள்" என்று கூற ஹனுமான் கருடனை விட்டுவிட்டு, "இராமபிரானும், ஸ்ரீக்ருஷ்ணனும் ஒருவரேதான். இருவருக்கும் பேதமில்லை என்றாலும் நான் ஸீதாபதி இராமபிரானின் பக்தன். என் உள்ளத்தில் இராமபிரான்தான் இருக்கின்றார். நான் எப்படி ஸ்ரீக்ருஷ்ணனிடம் வருவேன்" என்றார். ஹனுமான் இவ்வாறு கூறியதும் பகவானின் லீலைக்குத் துணைபுரிவதாகவே அமைந்தது.

அப்பொழுதும் கருடனின் கர்வம் விட்டபாடில்லை. ஹனுமான் என்னைப் பிடிக்காமல் இருந்திருந்தால் நான் அவரை எடுத்துச் சென்றிருப்பேன் என நினைத்த அவர் இரண்டாம் முறையாக ஹனுமானைப் பிடிக்க வந்தார். செருக்கு ஒருவனைக் குருடாக்கிவிடுகிறது. ஸ்ரீக்ருஷ்ணனால் அனுப்பப்பட்டவர் என்பதால் அதிகமாய் அவரைத் துன்புறுத்தாமல், கையால் மெல்லப் பற்றி கடல் பக்கமாய் தூக்கியெறிந்தார்.

கடலில் வீழ்ந்த கருடனுக்கு திக்ப்ரமை ஏற்பட்டு வெகுநேரம் அங்கேயே கலங்கியபடி கிடந்தார். அவர் பகவானை ஸ்மரிக்க த்வாரகா கண்ணில் தென்படவே பகவானிடம் ஓடி வந்தார். எல்லா விஷயங்களையும் கேட்ட ஸ்ரீக்ருஷ்ணன் கலகல வென சிரித்தார். தற்பொழுதும் கருடனுக்கு தான் வேகமாய் பறக்கக்கூடியவன் எனும் கர்வம் எஞ்சியிருந்தது. "பறப்பதில் எனக்கு வாயுவும் நிகராக மாட்டான். பலத்தில் வேண்டுமானால் ஹனுமான் என்னைவிட பெரியவனாய் இருக்கலாம்" என கருடன் எண்ணினார்.

பகவான்- "கருடனே! இம்முறை போய் உமது இஷ்டதெய்வம் இராமபிரான் உன்னைக் கூப்பிடுகிறார் என்று கூறி உன்னுடன் அவரை அழைத்து வா. இப்பொழுது அவர் மறுத்துரைக்க மாட்டார். உன்னை மிகவும் மதிப்பார்" என்று கூறினார். கருடனுக்கு போவதற்குத் தயக்கம் ஏற்பட்டாலும், தனது பறக்கும் சக்தியை காட்டுவதற்காகச் சென்றார். "ஸீதையைப் போன்ற உருவம் தாங்கி வா. ஹனுமான் வந்து கொண்டு இருக்கின்றார்" என சத்தியபாமாவிடம் ஸ்ரீக்ருஷ்ணன் சொன்னார். "யாரும் த்வாரகாவில் நுழைந்துவிடாமல் கவனமாய் காவல் காத்து வா" என சக்கரத்திடம் கூறினார். ஸுதர்சன சக்கரம் கவனமுடன் காவல் புரியத் தொடங்கியது. சத்தியபாமாவும் சிங்காரம் செய்து கொண்டு பகட்டுடன் தன் அழகில் செருக்குற்றபடி இருந்தாள். ஸ்ரீக்ருஷ்ணன் வில்லும், அம்பும் தாங்கி ஸ்ரீராமசந்திரனாய் இருந்தார்.

இந்தத் தடவை ஹனுமானின் அருகில் செல்வதற்கு கருடனுக்கு தைரியம் ஏற்படவில்லை. தூரத்தில் இருந்தபடியே, "பகவான் ஸ்ரீராமசந்திர பிரபு தங்களை விரைவில் அழைக்கின்றார். என்னுடன் வர முடியுமானால் வாருங்கள். இல்லாவிடில் என் மேல் அமர்ந்தால் நான் அழைத்துச் செல்கின்றேன்" என்றார். ஹனுமான் பெரும் மகிழ்ச்சியுடன் "ஆகா! பெரும்பேறு பெற்றேன். பகவான் என்னை அழைத்து இருக்கின்றார். நீங்கள் செல்லுங்கள். நானும் வருகின்றேன்" என்று கூற, கருடன், "இவர் என்ன சொல்கிறார். என் பின்னால் வந்தால் எப்பொழுது வந்து சேருவார்?" என்று நினைத்தாலும், ஏதும் சொல்லத் துணிவின்றி மௌனமாய்ப் புறப்பட்டார். விரைவில் பகவானிடம் சென்று எனது கடும் வேகத்தை உணர்த்துவேன் என நினைத்தார். ஆனால் கருடனுக்கு மிகவும் முன்பாகவே ஹனுமான் த்வாரகாவை அடைந்திருந்தார். ஹனுமானுக்கு அது த்வாரகாவாக இல்லாமல் அயோத்தியாகவே தோன்றியது. காவலில் இருந்த சக்கரம் முறுக்குடன்- "உன்னை உள்ளே செல்ல அனுமதிக்கமாட்டேன்" என்றது. "பகவானை தரிசிக்க செல்லும்பொழுது இடையூறா செய்கிறாய்" என்று பகர்ந்த வாயுகுமாரன், அவரைப் பிடித்து வாயில் அடக்கிக் கொண்டார். பகவானின் அரண்மனைக்குச் சென்று சிம்மாஸனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீராமசந்திரபிரபுவைப் பார்த்தார். ஸீதையைக் காணவில்லை. பகவானின் சரணங்களில் சாஷ்டாங்கமாய் வீழ்ந்து வணங்கி "மகாராஜ்! ஸீதாமாதா எங்கே? ஸீதையின்

இடத்தில் யார் அமர்ந்து இருக்கின்றார்கள்? எந்த தாஸிக்கு தாங்கள் இவ்வளவு இடம் கொடுத்து வைத்திருக்கின்றீர்கள்?" எனக் கேட்டார். சத்தியபாமை வெட்கமடைந்தாள். அவள் சௌந்தர்ய கர்வம் ஒழிந்தது. "ஆஞ்ஜனேயா! உன்னை யாருமே தடுக்கவில்லையா?" என பகவான் கேட்க அஞ்ஜனை மைந்தனின் வாயிலிருந்து சக்கரம் வெளிப்பட்டு எதிரில் நின்றது. சக்கரம் பொலிவிழந்து போய்விட்டது. இரைக்க இரைக்கப் பறந்து வந்த கருடன் முன்னமேயே அங்கு வந்துவிட்டிருந்த வாயு மைந்தனைக் கண்டு தலை குனிந்தார். இவ்வாறு ஹனுமானை நிமித்தமாய்க் கொண்டு பகவான் மூவருடைய கர்வத்தையும் ஒழித்து அவரை த்வாரகாவின் கீழ்வாயிலில் நகரக்காவலுக்காக நியமித்தார்.

* * * * *

பாண்டவர்கள் காம்யவனத்தில் இருந்த சமயம். ஒரு நாள் த்ரௌபதியின் அருகில் நறுமணம் நிரம்பிய, ஓரழகிய மலர் காற்றில் வீழ்ந்தது. த்ரௌபதி பீமனிடம் அதுபோன்ற புஷ்பம் வேண்டுமென கேட்க, புஷ்பம் காற்றில் வந்த திசை நோக்கி பீமன் கிளம்பினார். பீமனுக்கு தன் வலிமையில் கர்வமிருந்ததால் எச்செயலையும் ஆராய்ந்து செயல்படுவது கிடையாது. "பீமன் என் தம்பி. அவன் மனதில் கர்வம் ஏற்படலாகாது. அவன் போகும் இடத்தில் பெரும் அபாயம் உள்ளது. முட்டாள்தனத்தால் அவனுக்கு ஒருபோதும் தீங்கு ஏற்படலாகாது" என எண்ணிய

வாயு மைந்தன் ஹனுமான், பீமன் செல்லும் பாதையில் கிடப்பவராய்த் தனது வாலை நீட்டிக் கொண்டார். பீமன், ஹனுமான் என்று தெரிந்து கொள்ளவில்லை. "வானரமே! உன் வாலைச் சுருட்டிக் கொள். இல்லாவிடில் நான் அதை முறித்தெறிவேன்" என்றார். மிகவும் கஷ்டப்படுபவர் போல் இருந்த ஆஞ்ஜனேயர்- "தம்பி! எனது வால் மிகவும் நீளமானது. நீ வாலிபன். பலசாலி. இதைத் தாண்டிச் செல். இல்லாவிடில் விலக்கிவிட்டுப் போ" என்றார். பீமனோ- "உனது வால் எவ்வளவு பெரியதாய் இருந்தாலும் எனது தமையனார் ஹனுமான் கடலைத்தாண்டியதுபோல் உமது வாலைத் தாண்டிவிடுவேன். ஆனால் அனைவரது உடலிலும் எம்பெருமான் எழுந்தருளியிருக்கிறார் என்பதால் யாரையும் தாண்டுவது முறையல்ல. எனவே விலக்கிவிட்டுச் செல்கிறேன்" என்று கூறி வாலை ஒரு கையால் தூக்கினார். முடியாமல் போகவே இரு கைகளாலும் தூக்கினார். ஆனால் சிறிதும் அசைக்க முடியவில்லை. வியர்த்துக் கொட்டியது. களைத்துப் போனார். அகந்தை அகன்றது. வானரம் ஹனுமான்தான் என்பதைப் புரிந்து கொண்டார். தன் செயலை நினைத்து வருந்தி மன்னிப்புக் கோரினார். ஹனுமான் பேரன்புடன் அவரை மார்போடு அணைத்து ஸ்ரீராம கதையைச் சொன்னார். பீமசேனனின் பெரும் பிடிவாதத்தால், ஹனுமான் தான் கடலைத் தாண்டியபோது எடுத்த பயங்கரமான உருவத்தைக் காண்பித்தார். பின் சிறிய உருவத்தை அடைந்தவராய் பீமனுக்கு பலவிதத்திலும் உபதேசித்தார். "இனிமேல் கர்வம் கொள்ளாதே.

******************************************************************

என்னைச் சந்தித்ததை யாரிடமும் சொல்ல வேண்டாம். ஏதாவது ஆபத்து வந்தால் என்னை நினைத்துக் கொள். நீ சொன்னால் ஹஸ்தினாபுரம் சென்று முழுவதையும் அழித்து த்ருதராஷ்டிரன் மக்களை ஒழித்து வருவேன். துர்யோதனனைக் கட்டி கொண்டு வருவேன். எதைச் சொன்னாலும் செய்யத் தயாராய் இருக்கின்றேன்." ஸ்ரீராம தூதனின் வார்த்தைகளைக் கேட்ட பீமன்- "தங்களுடைய உதவியால் நாங்கள் நாதனை அடைந்தவர்களானோம். தங்கள் உதவியாலேயே நாங்கள் பகைவரை வெல்ல முடியும்" என்றார். ஹனுமானும்- "பீமா! நீ எதிரிகளின் படைக்குள் நுழைந்து சிம்மகர்ஜனை செய்யுங்கால் நானும் அர்ஜுனனின் கொடியில் இருந்தபடியே அதைப் போலவே கர்ஜிப்பேன். அதைக் கேட்கும் எதிரி நடைபிணமாய் ஆவான்" என்று கூறி பீமனை அணைத்து அங்கிருந்து மறைந்தார். அவர் காட்டிய பாதையின் வழியே சென்ற பீமன் முடிவில் அந்த மலரை அடைந்தார்.

* * * * *

ஹனுமானுக்கு கர்வம் என்பதே இருந்தது கிடையாது. அவரது வாழ்க்கையில் எங்குமே கர்வம் தென்பட்டதே இல்லை. ஆகையால் பக்தர்களின் கர்வத்தை நீக்க நினைக்கும் பகவான், ஹனுமான் மூலமே அதை நிறைவேற்றுகிறார். அர்ஜுனனுக்கும் ஒரு சமயம் தன் வீர்யத்தில் செருக்கு ஏற்பட்டது. ஒரு நாள் பேச்சோடு பேச்சாக ஸ்ரீக்ருஷ்ணனிடம் "நீ ராமாவதாரத்தில் கடலில் அணைகட்ட அவ்வளவு ஏன்

சிரமப்பட்டாய்? அம்புகளாலேயே அணை கட்டு வதை விட்டுவிட்டு, உபயோகமற்ற வானரங்களை வீணாக ஏன் சிரமத்துக்குள்ளாக்கினாய்?" என்று சொல்ல பகவான் சிரித்துக் கொண்டார். அவரது சிரிப்புத்தானே உலகை மயக்கும் மாயை. மேலும் சொல்லத் தொடங்கினார்- "மிகவும் நல்லது. கடலின் ஒரு சிறுபகுதியில் நீ அம்புகளால் அணை கட்டு. பின்பு நான் சொல்கிறேன்." அர்ஜுனனும் மிக விரைவிலேயே அவ்வாறு செய்தார்.

பகவான் ஹனுமானை நினைக்க, அவர் உடனேயே வந்தார். பகவானின் ஆணையின்படி பாணங்களால் ஆன அணைமேல் ஏறினார். அவர் ஏறிய உடனேயே அணையானது படபடவென நொறுங்கத் தொடங்கியது. அவர் அதிலிருந்து இறங்கினார். பகவானின் முதுகில் ரத்தம் பெருகுவதை அர்ஜுனன் கண்டான். பகவான் தன் முதுகால் அதைத் தாங்கி நிறுத்தாதிருந்தால் அது நீரில் மூழ்கிவிட்டிருக்கும் என பகவானிடம் கேட்டறிந்த அர்ஜுனன் வெட்கமடைந்தார். பகவான்- "இது போன்ற அனேக வானர வீரர்கள் இருந்தனர். அவர்கள் பாணங்களால் ஆன அணைமேல் எப்படிச் செல்வார்கள்?" எனக் கேட்க அர்ஜுனன் புரிந்து கொண்டு கர்வத்தை நீத்தான்.

அர்ஜுனன், பகவானின் ஆணையின்படி ஹனுமானை ஆராதித்தார். அவர் மந்திரத்தால் புறச்சரணம் செய்தார். "நான் எப்பொழுதும் உனக்கு உதவுவேன். வரப்போகும் பெரும்போரில் உனது தேரில் அமர்ந்து உன்னைக் காப்பேன்" என்று ஹனுமான் வரமருளினார். பாரதப்போரில்

அர்ஜுன பாணங்களால் எல்லோருடைய ரதமும் வெகுதூரம் ஓடி சுழன்றன என்றும், ஆனால் யாருடைய பாணத்தாலும் அர்ஜுனனின் ரதம் அசையக்கூட இல்லை என்றும் சொல்லப்படுகிறது. ஒரு தடவை கர்ணனின் பாணத்தால் அர்ஜுனனின் ரதம் சிறிது பின் வாங்கியபோது, ஸ்ரீக்ருஷ்ணன் கர்ணனை மிகவும் கொண்டாடினார். அர்ஜுனன் பகவானிடம்- "எனது பாணத்தால் கர்ணனின் ரதம் வெகுதூரம் பின் சென்றது. எனது ரதமோ அவன் பாணத்தால் சிறிதுதான் பின்வாங்கியது. பின் ஏன் அவனைக் கெண்டாடுகிறாய்?" என்று கேட்க பகவான்- "அர்ஜுன! உனது ரதத்தில் ஹனுமான் அமர்ந்திருக்கின்றார். எனவே தான் உனது ரதம் இதுவரை சாம்பலாகவில்லை. ஹனுமான் அமர்ந்த ரதமும் பின்வாங்கியது என்பது கர்ணனது போர்த்திறனைப் பறைசாற்றவில்லையா?" என பதிலுரைக்க அர்ஜுனன் சமாதானமடைந்தார். போரின் முடிவில் ஹனுமான் தேரிலிருந்து குதித்தவுடன், அத்தேர் எரிந்து சாம்பலாயிற்று. அர்ஜுனன் இத்தகைய வீர்யத்துடன் யுத்தம் செய்ததானது ஹனுமானின் பராக்ரமமே.

* * * * *

ஸ்ரீக்ருஷ்ணனின் புதல்வன் ப்ரத்யும்னன் திக்விஜயத்திற்காக புறப்பட்டான். த்வாரகாவில் நடக்கவிருக்கும் அச்வமேத யாகத்திற்கான ஏற்பாடு அது. திக்விஜயம் செய்தபடியே அவன் ஹிரண்மயகண்டத்திற்கு வந்தான். அது சமயம் அவனுடன் அர்ஜுனனும் இருந்தார். கொடியில் ஹனுமான் சோபித்தார் ஹிரண்மயகண்டத்தில்

நலன், நீலன் இவர்கள் வம்சத்தில் வந்தவர்களுடன் பெரும் போர் நடந்தது. அர்ஜுனனும் போர் செய்து கொண்டிருந்தான். அங்கிருந்த வீரவானரர் கள் ப்ரத்யும்னன், அர்ஜுனனின் ரதத்தை வாலால் சுருட்டி பூமியில் அடித்தனர். பெரும் போர் நடந்தது. முடிவில் ஹனுமான் கொடியிலிருந்து குதித்து எல்லா வானரர்களையும் தன் வாலதியில் அடக்கிக் கொண்டார். ஹனுமான் என்று தெரிந்த வுடன் அங்கு வசிக்கும் அனைவரும் பெரும் சிரத்தா பக்தியுடன் ஹனுமான், ப்ரத்யும்னன், அர்ஜுனன் முதலியவர்களை பூஜித்தனர். பல பொருட்களையும் அர்ப்பணித்தனர். அங்கிருந்து அவர்கள் வேறு இடத்திற்கு சென்றனர்.

ஹனுமான் எத்தகைய தத்துவஞானி என்பது ராமரகசிய உபனிஷத்தைப் பார்த்தால் தெரியும். ஸனகர், ஸனந்தனர், ஸனாதனர், ஸனத்குமாரர் ஆகியோர் அவரிடமிருந்து ராம மந்திர ரகசியங்களைப் பெற்றனர். பெரும் பெரும் முனிவர்களும், ப்ரஹலாதனும் ஹனுமானின் சிஷ்யர்களாயினர். இராமபிரான் தானே அவருக்கு உபநிடதங்களை உபதேசித்தருளினார். அதுவே முக்திகோபனிஷத் ஆகும். மேலும் வெவ்வேறு புராணங்களிலும் ஹனுமானின் சரித்திரம் விஸ்தாரமாய் வர்ணிக்கப்பட்டுள்ளது. இங்கு அவர் வாழ்க்கையின் சில சம்பவங்கள் மட்டுமே சுருக்கி எழுதப்பட்டுள்ளன.

பகவான் ஹனுமான் எங்கும் போய் விடவில்லை. இங்கேயே இருக்கின்றார். இன்றும் நம் நடுவில் இருக்கின்றார். நாம் தான் அவரை தெரிந்து கொள்ளவில்லை. நமது சிரத்தையின்மை

*******************************************************************

யும், பக்தியின்மையும் தான் அதற்கு காரணம். துளஸீதாஸர் போன்ற மஹாத்மாக்கள் இந்த யுகத்திலும் ஹனுமானை சாட்சாத்கரித்துள்ளனர். மாருதியை பார்க்கக்கூடிய ஸாதகர்கள் இன்றும் உள்ளனர். அவரை சாட்சாத்கரிக்க சாஸ்த்ரங்களில் எவ்வளவோ மந்திரங்களும், அனுஷ்டானங்களும் உள்ளன. சிரத்தையுடன் அவைகளை பின்பற்றினால் ஹனுமானை தரிசிக்கலாம். அவரை நினைப்பதால் மனம் தூய்மையடைகிறது. அவர் தம் கிருபையால் பகவானை அடைய முடியும்.

**ஸ்ரீமாருதி ப்ரஸன்ன**
**"ஜய் ஹனுமான்"**

**அஞ்சிலே ஒன்று பெற்றான், அஞ்சிலே ஒன்றைத்தாவி,**
**அஞ்சிலே ஒன்று ஆறாக, ஆர் உயிர்காக்க ஏகி,**
**அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக் கண்டு, அயலார் ஊரில்**
**அஞ்சிலே ஒன்று வைத்தான் அவன் எம்மை அளித்துக் காப்பான்.**

**- கம்பராமாயணம்.**

* * * * *

# அனுமன் தூது

இராமதூதனாக இலங்கை சென்ற ஹனுமான் அசோகவனத்தில் பிராட்டியைக் கண்டு, பல அடையாளங்கள் (முன் நடந்த நிகழ்ச்சிகள்) கூறித் தான் ஸ்ரீராமதூதன் என்பதில் பிராட்டியை நம்பிக்கை கொள்ளச் செய்கிறார். இராமபிரானது கணையாழியை அன்னைக்கு அளித்துப் பேருவகை தருகிறார். இவ்வழகிய இராமகாதைப் பகுதியைப் பெரியாழ்வார் பாசுரமுகமாக அருளிச் செய்வதைக் காண்போம் இனி.

**நெறித்த கருங்குழல் மடவாய்!**
**நின்னடியேன் விண்ணப்பம்,**
**செறிந்த மணிமுடிச் சனகன்**
**சிலையறுத்து நினைக் கொணர்ந்த**
**தறிந்து, அரசு களை கட்ட**
**அருந்தவத்தோன் இடை விலங்க,**
**செறிந்த சிலை கொடு தவத்தைச்**
**சிதைத்ததும் ஓர் அடையாளம் (1)**

ஜனகராஜன் திருமகளாகிய பிராட்டியை, இராமபிரான் சிவதனுர்பங்கம் செய்து, மணம் செய்து கொண்டதை அறிந்து கொண்டு, கடுங்கோபத்தோடு பரசுராமர், இராமபிரானிடம் விஷ்ணு தனுசைக் கொடுத்து நாணேற்றச் சொல்ல, எளிதாக நாணேந்திய எம்பெருமான் அந்த அம்புக்கு இலக்காகப் பரசுராமரது அருந்தவத்தைச் சிதைத்து அவரது செருக்கை அடக்கியதை மாருதி, பிராட்டியிடம் ஓர் அடையாளமாகக் கூறுகிறார்.

* * * * *

**அல்லியம் பூ மலர்க் கோதாய்!**
**அடிபணிந்தேன் விண்ணப்பம்,**
**சொல்லுகேன் கேட்டருளாய்**
**துணை மலர்க்கண் மடமானே,**
**எல்லியம்போ தினிதிருத்தல்**
**இருந்ததோர் இடவகையில்,**
**மல்லிகை மா மாலைகொண்டங்கு**
**ஆர்த்ததும் ஓர் அடையாளம் (2)**

பிராட்டியும், எம்பெருமானும், வனவாச காலத்தில் ஒரு சமயம் தனித்திருக்கையில் சொக்கட்டான் ஆடுகிறார்கள். வென்றவர் தோற்றவரை மல்லிகை மலர்ச்சரத்தால் மரத்தோடு

பிணைக்க வேண்டும் என்ற ஒப்பந்தத்தோடு விளையாட்டு துவங்குகிறது. 'அஜிதர்' (வெல்லவொண்ணாதவர்) என்ற பெயர் படைத்த எம்பெருமான், பிராட்டியிடம் விளையாட்டில் தோற்க, ஒப்பந்தத்தின்படி பிராட்டி, எம்பெருமானை மலர்ச் சரத்தால் அருகிலிருந்த மரத்தோடு கட்ட, இராமபிரானும் புன்முறுவலோடு கட்டுண்டு நின்ற நிகழ்ச்சியை மாருதி பிராட்டியிடம் அடையாளமாகத் தெரிவிக்கிறார்.

* * * * *

**கலக்கிய மா மனத்தவளாய்**
**கைகேசி வரம் வேண்ட,**
**மலக்கிய மா மனத்தவனாய்**
**மன்னவனும் மருதொழிய,**
**"குலக்குமரா! காடுறையப்**
**போ" என்று விடை பொடுப்ப,**
**இலக்குமணன் தன்னோடுமங்கு**
**ஏகியதோர் அடையாளம்.** (3)

மந்தரையின் சூழ்ச்சியால் கைகேயி மனம் தடுமாறி, தசரதரிடம் இரு வரங்கள் வேண்டியதும், வாய்மைக்குக் கட்டுப்பட்ட மன்னரும் மறுக்க முடியாமல் வரமளித்ததும், கானகத்துக்கு விடை கொடுத்ததும், இராமபிரான் லக்ஷ்மணரோடு கானகம் எழுந்தருளியதுமான நிகழ்ச்சிகள் பிராட்டிக்கு அடையாளமாய் உரைக்கப்படுகின்றன.

* * * * *

**வாரணிந்த முலை மடவாய்!**
**வைதேவீ! விண்ணப்பம்,**
**தேரணிந்த அயோத்தியர் கோன்**
**பெருந்தேவீ! கேட்டருளாய்,**
**கூரணிந்த வேல் வலவன்**
**குகனோடும் கங்கை தன்னில்,**
**சீரணிந்த தோழமையைக்**
**கொண்டதும் ஓர் அடையாளம்.** (4)

கங்கையாற்றைக் கடக்குமுன் சிருங்கிபேர புரத்து அதிபனும், வேடுவனுமான அன்பிற்சிறந்த குகனோடு தோழமை பூண்டு "குகனொடும் ஐவரானோம்" என்று சக்கரவர்த்தித் திருமகனார், பிராட்டிக்குக் குகப் பெருமாளை ஒரு மைத்துனராகவே அறிமுகம் செய்து வைத்த, மனத்தை நெகிழ்விக்கும் நிகழ்ச்சியை மாருதி அடையாளமாகக் கூறுகிறார்.

* * * * *

**மானமருமென்னோக்கி!**
**வைதேவீ! விண்ணப்பம்,**
**கானமரும் கல்லதர் போய்க்**
**காடுறைந்த காலத்து,**
**தேனமரும் பொழிற் சாரல்**
**சித்திர கூடத் திருப்ப,**
**பான் மொழியாய்! பரத நம்பி**
**பணிந்ததும் ஓர் அடையாளம்** (5)

திருச்சித்திரகூடத்தின் கண் சக்கரவர்த்தித் திருமகனார், பிராட்டியுடனும், ஆராவன்பு இளையவனோடும் தங்கியிருந்த காலத்தில், குணபூர்ணரான பரதநம்பி, இராமபிரானை அடி பணிந்து முடிசூடிக் கொள்ள அழைத்தபோது இராமபிரான் மறுத்துரைத்து தமது திருவடி நிலைகளை (ஸ்ரீபாதுகைகளை) அளித்து, ஆறுதல் மொழிகள் கூறி பரதாழ்வானை அயோத்தி அனுப்பிய நிகழ்ச்சிகள் உணர்த்தப்படுகின்றன.

* * * * *

**சித்திர கூடந்திருப்பச்**
**சிறுகாக்கை முலைதீண்ட,**
**அத்திரமே கொண்டெறிய**
**அனைத்துலகும் திரிந்தோடி,**
**"வித்தகனே! இராமாவோ!**
**நின்னபயம்!" என்றழைப்ப,**
**அத்திரமே அதன் கண்ணை**
**அறுத்ததும் ஓர் அடையாளம்** (6)

இராமபிரான் பிராட்டியின் மடிமீது திருமுடி சாய்த்துக் கண் வளரும் வேளையில், இந்த்ரன் மகனாகிய ஜயந்தன் காக்கையுருக் கொண்டு பிராட்டியின் மார்பகங்களைக் கொத்தித் துன்புறுத்த, இரத்தம் சிந்துவதைக் கண்டு சினமுற்ற எம்பெருமான், ஒரு புல்லில் ப்ரம்மாஸ்திரத்தை மந்திரித்து ஏவ ஜயந்தன் மூவுலகும் திரிந்து அடைக்கலம் தேடுவதும், சீறிவரும் ராமபாணத்தைக் கண்டு அச்சமுற்ற தேவரும், மூவரும், முனிவரும் ஜயந்தனுக்கு அபயமளிக்க மறுத்து விடுவதும், வேறு புகலின்றி அவன் இராமபிரானிடமே சரண்புகுந்து உயிர் பிழைப்பதுமான நிகழ்ச்சிகள் அடையாளம் கூறப்படுகின்றன.

* * * * *

**மின்னொத்த நுண்ணிடையாய்!**
**மெய்படியேன் விண்ணப்பம்,**

பொன்னொத்த மானொன்று
புகுந்து இனிது விளையாட,
நின்னன்பின் வழிநின்று
சிலை பிடித்து எம்பிரானேக,
பின்னே அங்கிலக்குமணன்
பிரிந்ததும் ஓர் அடையாளம். (7)

மாரீசன் மானுருக்கொண்டு ஆசிரமத்தின் அருகில் விளையாடுவதைக் கண்ட பிராட்டி அம்மாய மானின் மேல் விருப்பங்கொண்டு, இராமபிரானிடம் அதைக் கூறுவதும், இராமபிரான் மானைத் துரத்தி அதை வீழ்த்துவதும், மாரீசன் பிராட்டியின் பெயரையும், இலக்குவனின் பெயரையும் கூவிய வாறு உயிர் துறப்பதையும், பிராட்டியின் சினமொழிகளால் இலக்குவன் ஆசிரமத்திலிருந்து அகல்வதையும் மாருதி கூறுகிறார்.

* * * * *

## பிராட்டிக்கு இராமபிரானது கணையாழியை அளித்தல்

மைத்தகுமா மலர்க் குழலாய்!
வைதேவீ! விண்ணப்பம்,
ஒத்த புகழ் வானரக்கோன்
உடனிருந்து நினைத்தேட,
அத்தகு சீர் அயோத்தியர் கோன்
அடையாளம் இவை மொழிந்தான்,
இத்தகையான் அடையாளம்
ஈது அவன் கை மோதிரமே. (8)

* * * * *

## பிராட்டி கணையாழி பெற்றுப் பேருவகை கொள்வது

திக்கு நிறை புகழாளன்
தீ வேள்விச் சென்றநாள்,
மிக்க பெரும் சபை நடுவே
வில்லிறுத்தான் மோதிரம் கண்டு,
"ஒக்குமால் அடையாளம்
அனுமான்!" என்று உச்சிமேல்
வைத்துக் கொண்டு, உகந்தனளால்
மலர்க் குழலாள் சீதையுமே. (9)

* * * * *




ஸ்ரீஹரி: ॥

# கீதாப்ரஸ் (கோரக்புர்) வெளியீடுகள்

| | | பக்கங்கள் | விலை |
|---|---|---|---|
| 1. | கீதா மாதுர்யம் | 235 | 8.00 |
| 2. | பசு பராமரிப்பின் நற்பயன்கள் | 96 | 3.50 |
| 3. | கர்ம ரஹஸ்யம் | 72 | 3.00 |
| 4. | சரணாகதி | 84 | 3.00 |
| 5. | உருவ வழிபாடு | 64 | 1.00 |
| 6. | தூய்மையான உணவுப்பழக்கம் | 64 | 1.00 |
| 7. | திருநாமஜபத்தின் மஹிமை | 64 | 1.00 |
| 8. | கீதை கற்பதன் பயன்கள் & ஸத்யத்தைச் சரணடைந்தால் முக்தி | 72 | 1.50 |
| 9. | ஸத்ஸங்கத்தின் ஸாரமான தத்வங்கள் | 64 | 0.75 |
| 10. | குடும்பத்தில் எப்படி இருக்கவேண்டும்? | 192 | 6.00 |
| 11. | மஹாபாபத்திலிருந்து உன்னைக் காத்துக் கொள் & பிள்ளைகளின் கடமைகள் | 125 | 2.00 |
| 12. | நாரத-பக்திஸூத்ரம் | 32 | 1.00 |
| 13. | பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் | 96 | 4.00 |
| 14. | ஹநுமாந் சாலீஸா | 64 | 1.50 |

**கிடைக்குமிடம்:**

கோபால் சேவா டிரஸ்ட்,
82, கிருஷ்ணா டாக்கீஸ் ரோடு,
ஈரோடு - 638 003.
Ph. No. 213976, 211668, 212702.
Fax No. 0422 213274.

**புத்தகங்கள் V.P.Pயில் அனுப்பி வைக்கப்படும்**

भक्तराज हनुमान् ( तमिल )

## Our English Publications

CODE

457 **Shrimad Bhagavadgita-Tattvavivechani** [With Sanskrit Text and English Commentary] (*By Jayadayal Goyandka*) (Pages 736)
458 **Shrimad Bhagavadgita-Sadhak–Sanjivani** [With Sanskrit Text and English Commentary] (*By Swami Ramsukhdas*) (Pages 896)
459 ,, ,, (Pocket-Size) Vol.I
490 ,, ,, ,, Vol.II
493 **Shrimad Bhagavadgita :** **The Gita–A Mirror** (Pocket-Size) (Pages 700)
455 **Shrimad Bhagavadgita** [With Sanskrit Text and English Translation] (Pocket-Size)
470 **Bhagavadgita–Roman Gita** [With Sanskrit Text, Transliteration and English Translation]
487 **Gita Madhurya** (*By Swami Ramsukhdas*) (Pages 155)
452 **Shrimad Valmiki Ramayan** [With Sanskrit Text and English Translation) Part I
453 ,, ,, Part II
454 ,, ,, Part III
456 **Shri Ramacharitamanas** [With Hindi Text and English Translation)

**By Jayadayal Goyandka**

477 **Gems of Truth** [ Vol. I] (Pages 204)
478 ,, [ Vol. II ] (Pages 216)
479 **Sure Steps to God-Realization** (Pages 344)
481 **Way to Divine Bliss** (Pages 93)
482 **What is Dharma? What is God?** (Pages 64)
480 **Instructive Eleven Stories** (Pages 104)
520 **Secret of Jnanayoga** (Pages 272)
521 **The Secret of Premayoga** (Pages 184)

**By Swami Ramsukhdasji**

498 **In Search of Supreme Abode** (Pages 146)
471 **Benedictory Discourses** (Pages 192)
473 **Art of Living** (Pages 124)
472 **How to Lead A Household Life** (Pages 72)
475 **Divine Name** (Pages 94)
476 **How to be Self-Reliant**
552 **Way to Attain the Supreme Bless**
494 **The Immanence of God** (*By Madanmohan Malaviya*)

